உ

திருச்சிற்றம்பலம்

# சுவாநுபவத் திருவாக்கு

நூலாசிரியர்

ஸ்ரீலஸ்ரீ

முத்துராமலிங்க ஞானதேசிகரவர்கள்

கோவிலூர்



நவயுகப் பிரசுராலயம்

காரைக்குடி.

1946

இந்நூல்

கோவிலூர் ஆண்டவர் குடும்பத்தார்களாகிய
ஆண்டவர்வீட்டுப் பிள்ளைகள் பொருளுதவியால்
இனாமாக வழங்கப்படுகிறது.

Printed at The South India Press, Karaikudi.
For Navayuga Prachuralayam, P. I. C. No. R. 68-A. 0,11,8446,50.

உ
சிவமயம்

சமீவன் க்ஷேத்திரம் என்னும்
கோவிலூர் சிவஸ்தலத்தில் எழுந்தருளியுள்ள
கோவிலூர் ஆண்டவர் என வழங்கும்
ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்கள்
திருவாய் மலர்ந்தருளிய

# சுவாநுபவத் திருவாக்கு

இஃது
ஷை முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்களின்
மடாதிபதி
ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் அவர்கள்
அனுமதியுடன்
வெளியிடப்பெறுகிறது.

நவயுகப் பிரசுராலயம்
காரைக்குடி
1946

விலை ரு. 1—0—0.

உ
சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.



சமிவனக்ஷேத்திரம் என்னுங்
கோயிலூர்

## அடியார் குழாத்துளொருவர்
## இயற்றியது.

**நேரிசை யாசிரியப்பா.**

பொன்னார் கமலப் பூவினி துறையும்
மன்னுந் திசைமுகன் வணங்தவான் புவியின்

மந்தா நிலந்தவழ் மலயமா மலைமேற்
சிந்தா மணியாய்த் திகழும் பெருந்தவக்

குறுமுனி மலர்வாய்க் குமுதநின் றொழுகும்
மறுவறு நறவாம் வண்டமிழ்ப் பாண்டி

வளநா டதனின் மாதவ முனிவரு
முளநா டரியசத் துதிதவா னந்தச்

சுயம்புவா யொளிருஞ் சோமசுந் தரனு
நயம்பரா பரைச்சே னயனநா யகியுஞ்

சுயஞ்சித் துருவாஞ் சுடர்வே லிறையும்
வயம்பெறு முலகின் மன்னுயிர் தழைப்பப்

பொன்மணி மௌலி புனைந்தமன் னவராய்
நன்முறைச் செங்கோ னடாத்திய வதனாற்

சதமகன் பூமகன் சனார்த்தன னுலகின்
முதன்மையாங் கைலையின் மூலநற் சிவனே

முறைசெலுத் தியவோர் முறைமையாற் கைலயி
னறமிகச் சிறந்த தந்நா டேயாம்

பல்வள நிறைந்தவப் பாண்டிநன் னாட்டின்
மல்குஞா னத்தவர் மன்னுநற் றலமதாய்ப்

பராவுத லுறுஞ்சிவன் பன்னிய காந்த
புராணயுக் தமதாம் புராதனத் தலமாய்த்

தாரணி சோமசுந் தரபாண் டியனருள்
வீரவுக் கிரன்சுதன் வீரபாண் டியனுல்

இராசகட் கேச னெனப்பெயர் புனைந்த
பராபர னேடும் பைம்பொனூர் வணிக

நேரிழை யாற்றிரு நெல்லையென் பெயர்புனை
வார்முலை யம்பிகை மன்னிவீற் றுறுவதாய்ச்

சிமிமணிக் கோபுரஞ் செம்பொன்மா ளிகைசூழ்
சமிவன மென்னத் தயங்குகேத் திரமாய்ப்

பணவணிப் பரனே பல்விளை யாடல்செய்
மணநிறை கடம்புசூழ் மதுரைமா நகர்க்குக்

குணபான் மூன்றரை கொண்டயோ சனைக்கு
மிணரார் குருந்தடி யினிலிறை வாதவூர்த்

திடமா தவர்க்கரு டிருப்பெருந் துறைக்குக்
குடபா லொன்றரை கொண்டயோ சனைக்கு

நாப்ப ணிலமக ளைகமுகத் திலகமென்
மாப்பண் புறுவதாய் மலிபுனி தமதாய்க்

குலவுநற் பதியாங் கோயிலூ ரதனின்
மலர்மணம் போல மன்னிவீற் றிருக்கும்

ஆரணம் பல்கலை யாகம முரைப்பருங்
காரணங் கற்பனை கடந்தொளிர் பரமாய்

உருவரு வொன்று முருதநின் மலமாய்ப்
பெருவெளி யாகிப் பிறங்குசித் துருவாய்
நித்திய நிர்க்குண நிராமய நிறைவாய்ச்
சத்திய சிற்சுக தாணுவாய் நினைவென்
களங்கமற் றொளிருங் கதிரொளி வடிவா
யளந்தறி தற்கொணு வகோசரப் பொருளாய்
முப்பதங் கடந்த முதற்பிர மமதாய்ச்
செப்புத லுறவொளிர் சிவமே யருளால்
ஊனமி லாலியா யுற்றிடு நீர்போன்
மானுட வடிவாய் வந்தவ தரித்த
சீர்முத்து ராம லிங்கமெய்த் தேசிகன்
கார்முகில் போலக் கருணையே பொழியும்
ஞானமே யுருவா நற்றிரு நெல்லை
யானவம் பிகையி னருண்மிகப் பெற்றுத்
தனதுரு வானசிற் சாகர மதனிற்
றினமுமே குளித்துந் திருந்திழை மிகவுஞ்
சோரநா யகன்மேற் றோய்மன மிருத்தி
வாரநா யகற்கு வரிசையாய் நடக்குஞ்
செய்கைபோற் பூரண சின்மயப் பொருளில்
வைகுறத் திருவுளம் வைத்துல குய்வான்
கொற்றவா லீசனெங் கோமா னருண்மிகப்
பெற்றவர் புகழப் பிறங்குபொற் குவடிவட்
கொணர்ந்துவைத் ததினிலைக் கோபுரம் பைம்பரி
புணர்ந்ததே ரிரவி போலொளிர் விமானந்
திரண்மணித் தூணிறுத் தியபல மண்டபந்
தரளவெண் சங்கந் தவழுவா லன்னப்

புட்பொலி வனசப் பொய்கைவண் பரிமளங்
கட்பொலி மலர்ப்பூங் காவிருங் கிளிபயில்

தென்னஞ் சோலைசூழ் திருவீ திகணிலை
மன்னுஞ் சுருதியின் வான்பொரு ளுணர்ந்தோர்

இதயதா மரைபுரை யேர்தரு மிரதம்
புதையநீண் முகிலுலாம் புரிசையோ டிராப்பகல்

வந்தவர்க் கெல்லாம் வானு ரமுதங்
கந்தமில் வேம்பாக் கைப்புறு மாறிங்

கன்னதா னம்புரி யறச்சாலை கண்மறை
சொன்னவா தமையுணர்தொன் முனிக்குழாங்கண்

மன்னுமா றணிமிகு மடாலயம் பிறவு
மின்னவா மெனமனோ ரியம்புதற் கரிதா

வகைவகை செம்பொன் மாரிபோல் வழங்கி
மிகநவ நவமா விளங்குறப் புரிந்தும்

இச்சமி வனத்தி லியற்றிய முறைபோன்
முச்சகம் புகழ்தர மொழிதலங் களினுங்

கோபுர மாதி குறைவற வியற்றியும்
மாபுரம் பூதன மாதர்சே யோடுங்

கூடுறு மவர்போற் குலாவியு மகத்திற்
பாடுறு மாசைப் பற்றிலா தவராய்

மேனியிற் றரித்த வெண்கலை போலத்
தானியல் வழாத தனிநெஞ் சினராய்

அனித்தியஞ் செல்வமென் றறிந்துகற் பகம்போற்
றனிப்பெருங் கொடையராய்ச் சாதன நிறைந்த

சித்தரா யில்லறஞ் சேர்ந்தினி திருக்கும்
பத்தரா மளப்பரும் பரமசி லர்க்குந்

தனிவளர் பரமே சத்திய மற்றவை
யினிதறு மநித்திய மென்றுணர் விவேகமும்

மிகநகர் ஞாளிகால் வெண்சோ றதனி
லிகபர போகத் திச்சையில் விராகமுஞ்

சமதம முதலாஞ் சட்குணச் செல்வமும்
முமலமி றீவிர மோட்சா பேட்சையும்

பூரண மாகப் பொருந்தியித் தேகம்
மாரண மாமுன் மறைப்பொரு ளுணர்வான்

ஆதனந் துன்புக் காமட வாரும்
மாதனக் குவையு மழலைவாய் மகவுந்

தடையெனப் பட்டினத் தார்போற் றுறந்து
கடைதொறு மேற்றுண் கரபாத் திரனுய்த்

திகம்பரி யாகித் தில்லையில் வைகுஞ்
சகம்புக ழருணு சலசீ டன்முதற்

றுறவு றுமெண்ணிலாத் தொண்டர்க டமக்குந்
திறமிகு மறைகளுட் சிறந்துறுஞ் சாம

வேதவந் தத்தில் விளங்குதத் துவமசிப்
போதமா வாக்கியம் புகலுறு மிலக்கியச்

சுத்தசிற் சொரூப சுவாநுபூ தியினைக்
கைத்தல மணிபோற் கணிப்பிலத் துவிதச்

சுருதியுத் திகளாற் றேமற வுணர்த்திப்
பெருகுதுன் பமிலப் பிரதிபந்த மாகச்

சாட்சாத் கார சகசாநு போகங்
காட்சிய தாகக் கருத்துற விளக்கியுந்

தற்கொடை வழங்குந் தன்மைபோ லெவர்க்கும்
பொற்கொடை பொழியும் பொருவிலா வள்ளலாய்க்

கருவினை யுயிர்கள் கழற்றிட வனந்தந்
திருவிளை யாடல் செய்தது மன்றி

யுற்பவ மினியுறு முயிர்களுக் கிரங்கி
யற்புத மாமுளத் தருண்மிகச் சுரந்து

கடனிகர் பிறவிக் கரையேற் றிடனங்
கடனென நினைந்து கவிகளிற் சிறந்த

வெண்பாக் கலித்துறை விருத்த முதலாப்
பண்பா வியலுறப் பலபா வினங்களாற்

றெய்வ வணக்கமுந் தெய்வநிச்சயமும்
நைவறு முத்தி நன்னிச் சயமும்

அஞ்சுறு நெஞ்சிற் கறிவுறுத் துதலும்
அஞ்சுகப் பத்து மலமரு நெஞ்சோ

டிரங்கலு மருளிறை யிணையடி வணக்கமும்
வரம்பெறு சொரூப வணக்கமு மிவைமுதற்

பொருவார் நாமம் புனைந்து
திருவாய் மலர்ந்தருள் செய்தனன் மாதோ.

---

உ

கணபதி துணை

# குருபரம்பரை வணக்கம்.

சமிவனக்ஷேத்திரம் என்னுங்

## கோயிலூர்

## அடியார் குழாத்துளொருவர்

## இயற்றியது.

---

பன்னிருசீர் ஆசிரியவிருத்தம்.

பரமாக வொளிர்சச்சி தானந்த மாம்விண்டு
பங்கயன் வசிட்டர்சத்தி
பராசமா முனிமகா வியாசர்சீர் சுகர்கௌட
பாதர்கோ விந்தயோகி
யருளுருவ மாஞ்சங்க ராசாரி யாமிறைக
ளமர்பத்ம பாதருயரத்
தாமலகர் தோடகா சிரியர்வார்த் திகர்வித்
தியாரண்ய ராகுமுரவோர்
இருளுருவ மற்றவவர் மரபதனில் வந்தசுப்
பிரமணிய தேவனயின
வீசனழ கப்பவா ரியன்வீர பத்திரகுரு
வின்பமுத் தையவடிகள்
தெருளுருவ மாமுகந் தையனன் மைகளிலாத்
தியனேன் றனையுமாண்ட
சீர்முத்து ராமலிங் கேசதே சிகனிவர்க
டிகழ்பத மிறைஞ்சுவோமே.

---

# சூசிபத்திரம்.





உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சுவாநுபவத் திருவாக்கு

## கணபதி வணக்கம்.

நேரிசை வெண்பா.

* தோலா னனமுந் துணைப்பதமு மைங்கரமும்
நாலாம் புயமருப்பு நாடியே—மேலோர்கள்
கள்ளமறப் போற்றுங் கணபதியை நன்மனமே
யுள்ள நிலையுறைக்க வுன்னு. (1)

நேரசைக் கட்டளைக்கலித்துறை.

சத்தேயென் சித்தத் தொளியாய் விளங்குஞ் சதாசுகமே
பத்தே பிறந்து பிறந்தேயிந் நாள்வரைப் பட்ட துன்பக்
கொத்தே யகற்றுங் குருவே பிறக்குங் குணகுணிக்கும்
வித்தே கமலிச் சிதம்பர மென்னும் விநாயகனே. (2)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

முற்பவத்தி லியான்புரிந்த திவினைகண் முழுதகற்று
முகத்தி னனை
யற்பசுகத் தெனையழுத்தா வைங்கரனைப் பிறப்பவமு
மகற்றுங் கோவைச்

* தோல் என்பது பதினெட்டுவித மங்கலச் சொற்களுள் ஒன்று கிய யானையின் பரியாயமா யமைந்துளது காண்க. இதன் விபரம் வெண்பாப் பாட்டியல், பன்னிரு பாட்டியல் முதலியவைகளிற் கண்டறிக. தோல் — யானை. ஆனனம் — முகம்.

சொற்பழுது புரியாத வணிகர்குலந் தினம்பணியுந்
துணைத்தா ளானைக்
* கற்பகத்தின் மிடியகற்றுங் கற்பகமா நாயகனைக்
கருத்தில் வைப்பாம். (3)

---

## சுப்பிரமணியர் வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பையா டரவப் பணிபுனையும்
பரமன் றனது திருச்செவியிற்
கையார் நெல்லிக் கனியெனவே
ககன ககன மிலதான
மெய்யாம் பிரம மிதுவென்று
விளம்பற் குரிய வேலோனே
பொய்யா மொழிய ரிடத்துறைவாய்
போற்றி போற்றி மிகப்போற்றி. (1)

திருப்பெருந்துறை.

தொந்தமுங் கடந்த தூயோர் துதித்திடற் குரிய பாத
மந்தமு நடுவு மின்றி யமர்ந்திடு மம்பொற் பாதஞ்
சந்ததஞ் சுகசிற் சத்தாய்ச் சதோதித மான பாதஞ்
சிந்தனைப்படியேதோன்றுந் திருப்பெருந்துறையான்பாதம்

---

* கற்பகத்தின் — கற்பக (விருட்ச)த்தைப் போல இன், ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருள்.

## கொற்றவாளீசர் வணக்கம்.

நேரிசை வெண்பா.

கருக்குழியில் விழ்ந்து கசடுருற வாகிப்
பெருக்கமாம் பொய்ப்பொருளைப் பேணு-மருக்கமழுந்
தென்கழனி யூரிற் சிறந்தகொற்ற வாளீசர்
பொன்கமலத் தாளிணையே போற்று. (1)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

* சுவருறையு மோவியங்கள் சுவரே யென்றல்
சுபாவமது போற்பரத்திற் றேன்று நின்ற
பவமுதலாஞ் சங்கற்ப விகற்ப மெல்லாம்
பரவடிவாய்க் கண்டுபர வடிவ மான

---

* இச்செய்யுளின் பிற்பாதிக்கு, மகான் தாயுமான சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளியுள்ள :—

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா.

அம்மாவீ ததிசயந்தா னன்றே வன்றே
அகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே.

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றே பராபரமே.

எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ.

என்ற செய்யுட்கள் சிந்திக்கத் தக்கவை.

தவருறையுங் கழனிநகர்க் கொற்ற நாதன்
றனதருளாற் பேதமதி நாயி னேனுக்
கிவனவனு னதுவென்னும் பேத மின்றி
யெவ்வுருவுஞ் சின்மயமா விருந்த வாறே. (2)

---

உபாசனாமூர்த்தியாகிய

## திருநெல்லையம்மை வணக்கம்.

---

நேரிசை வெண்பா.

அருவா யுருவா யருவுருவாய் மேலாந்
திருநெல்லை யம்மையுருச் செப்ப - வுருநாமம்
ஆரணங்க ளோத வரியபரா சத்திபெற்ற
வாரணமே தந்தாள் வரம். (1)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆரு றகன்ற பரசிவமா யறிவா யழிவில் சுகவடிவாய்
வீரூர் பரிபூ ரணவுருவாய் வெளியாய் நிறைந்த விநாயகனை
நூறு யிரக்கால் வணங்கிடுவா நுவலற் கரிய பூரணியை
யாறு விழிகண் ணீரொழுக வகத்தே துதிக்க வருளென்றே

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஓராறு சமயருளத் துணராய் போற்றி
யுணர்விலியே னுணர்வுதனக் குணர்வே போற்றி
காராரு மிடற்றோனு மயனு மாலுங்
காண்பரிய வொளிபோற்றி கரியே போற்றி
தாராருங் குலிசன்முதற் றேவ ரெல்லாந்
தாவரிய பரஞ்சுடரே தாயே போற்றி
சீராருங் கழனியில்வாழ் சிவையே போற்றி
திருநெல்லை நாயகியே போற்றி போற்றி. (1)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருளொடு பரையாய்ச் சிவமய மாகு
மம்மையே யெனதகத் திருந்து
தெருளொடு மருளுந் தியக்கறத் தெளித்த
தெய்வமே யன்பிலே னுனது
திருவடி நிழலிற் றிரிபுடி மறந்து
திரமொடுஞ் சேருநா ளுளதோ
விருளற விளங்குங் கழனியம் பதிவா
ழேகமே திருநெல்லை யம்மே. (2)

கண்டதே திரமாக் கவர்ந்திடுங் கருத்தைக்
கழலிணை நிழலிலே யிருத்திக்
கொண்டிட வெனக்கோர் திரமிலை கவரா
திருக்கவு மருளது கொடுப்பாய்
தண்டற விளங்குஞ் சச்சிதா னந்தத்
தையலே சகத்துளோர் களுமே
லண்டரு மிறைஞ்சுங் கழனியம் பதிவா
ழம்மையே திருநெல்லை யம்மே. (3)

வேண்டுவ தொழிந்தும் வினையிருள் கடிந்தும்
விழுப்பொரு ளிதுவெனக் கண்டு
மீண்டுறு நாம வுருவெலாஞ் சிவமா
விதயத்தி லுணர்ந்திவை மறந்துங்
காண்டகு நினது திருவடி கதியாக்
கலந்தன ரடியர்யா னின்ன
மீண்டிருந் தந்தோ விடருற லழகோ
வென்னையா டிருநெல்லை யம்மே. (4)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சகலமெனுந் தொந்தமெலாஞ் சிவத்தி லுண்டாய்த்
தனக்கென்ன வடிவின்றித் தானுண்டான

சுகவடிவே வடிவாக விருந்தத் தொந்தஞ்
சுகரூப மாதலநு பவமாக் கண்டும்
அகமுடலென் றனுதினமு நாடி நாடி
யகமிதமென் றனவரத நைந்து நைந்தும்
இகமிருந்தே மனதுமிக வாடல்கண்டு
மின்னமிரங் காதிருத்த லென்னே யம்மே. (5)

ஓராகந் தனையசைக்கு மாவே சத்தை
யொருகர்த்தா வுண்டென்று துலகிற் சொல்லும்
பேராத சோதிடத்தைக் கால மென்னுப்
பித்தாகும் வயித்தியத்தைப் பிறங்குஞ் சித்தை
யோராது சடங்களையுந் தெய்வ மென்றே
யுணர்ந்திடுமிம் மார்க்கமெலா முணர்வாக்கானுஞ்
சீராகுந் துணிவுதனை யருள்வாய் தெய்வத்
திருநெல்லை நாயகியே யம்மே யம்மே. (6)

கொச்சகக் கலிப்பா.

சும்மா விருந்தறியேன் சுகமிதுவா மெனத்தொடரே
னிம்மா நிலத்துறுகாண் பனவிவையே சுகமென்னு
மிம்மா மயறீரும் படியேழை முகம்பாரா
யம்மா வறிவுருவே திருநெல்லை யகமிதமே. (7)

பேயாயி னுந்தருவிற் கணநிலைபெற் றிடும்பேயி
னேயா துழறமியேன் மனதொன்றி னிலையின்றி
நோயா லயதனுவா யனுதினநை வதுநோக்கா
யாயே யரும்பொருளே திருநெல்லை யகமிதமே. (8)

ஏகா விருளகமா யிருந்ததனு லிதமகிதத்
தாகா திகளாலே தினமறவுந் துயருற்றேன்
ஓகோ வினமுனை நா னடைந்துய்யும் வகையுளதோ
வாகா வவையாகுந் திருநெல்லை யகமிதமே. (9)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்,

வந்தே புவியின் மதியவித்தை
வசமாய்க் காய வசமாக
வந்தே வருத்துஞ் சுகாசுகத்தை
மாய்க்கும் வழியே தெனத்தேடி
வந்தே னுனது திருநெல்லை
மகத்தாம் பதிவந் துன்னருளால்
வந்தேன் வந்தேன் பரிபூர்ண
வனச மலர்த்தா டானுக. (10)

வேறு

அறிவறியா மைகளிரண்டு மறிபவனை யகமிதமு
மாகி யெங்குஞ்
செறியொளியா யிருந்தகில சிருட்டிதிதி சங்காரச்
செயலுள் ளானைப்
பிறிவறியா வடியருளம் பிறங்குமிரும் பூரணியைப்
பேதா பேதக்
குறியிறந்த நிலையானைக் குணக்கடலை யருட்குன்றைக்
குறித்து வாழ்வாம். (11)

ஆசையெனும் விடமகற்று மருமருந்தை யம்பரத்துக்
கடங்கா தந்த
வாசகலு மம்பரத்தை யணுவினுக்கு மணுவாகி
யனந்த மாகுந்
தேசுருவ வடிவானைச் சித்தமுத லாறறியாத்
திறத்தி னானைக்
கோசமெனு மைம்பூதக்குரம்பையுறைந் துறையானைக்
குறித்து வாழ்வாம். (12)

படியளந்த மாலயனு மரனுமென தியானென்னும்
பாவத் தாலே

மடியவது வின்றியன வரதமொரு நிலையாகும்
வடிவத் தாளை
முடிவறியாப் பெருப்பாழையகமிதழும் விளக்கியெனை
முடித்திட் டாளைக்
கொடியமன வேட்கையற வருமரிய பூரணியைக்
குறித்து வாழ்வாம். (13)

தீங்கிடர்க ளில்லாளைச் சிதம்பரமாம் வடிவாளைச்
சிந்தை யாதி
யோங்கிருமூன் ருனை யுன்னரிய வடிவாளை
யுணர்வி லேனைத்
தாங்குதிரு வுளத்தாளைச் சந்ததந்தன் மயத்தாளைத்
* தாம மூன்றும்
நீங்காது விளக்குவளை நெடுங்கழனிப் பதியாளை
நினைத்தல் செய்வாம். (14)

அல்லலெனும் பிணியகற்று மருமருந்தை யெனதகத்து
ளமர்ந்த தாயைச்
சொல்லரிய பரஞ்சுடரை யகம்புறமுஞ் சுகமளிக்குந்
துரிய வாழ்வைப்
பல்லுருவும் படைப்பாளைப் படைத்தவையா யிருப்பாளைப்
படையா தாளைச்
¶ செல்லாத விருளகற்றுந் திருநெல்லை நாயகியைச்
சிந்தை சேர்ப்பாம். (15)

எண்சீர் விருத்தம்

நானவனீ ததுவெனலு மாயி னுளை
நாடரிய விவற்றகண்ட மாய்நின் றுளை
யானசகம் வரநிறுத்த மாயி னுளை
யதுவொடுபா தானமென வாயி னுளை

* தாமம் - அவஸ்தை. ¶ செல்லாதஇருள் – அஞ்ஞானம்

யீனமன மில்லிதயத் தெய்து வாளை
யீனருளத் திருந்துமவர்க் கெய்தா தாளைத்
தீனமறச் சேடமதாங் * திருக்கா வாளைத்
திருநெல்லை நாயகியைச் சிந்தை செய்வாம். (16)

வேறு.

வானுடர் மணம்பொருந்தும் வாழ்வுநினை யாதே
மண்ணுடர் பதியடையும் வாழ்க்கைநினை யாதே
நானெனன் றில்வாழ்வி னண்ணியுழ லாதே
நாலிரண்டு சமயநெறி நாடியலை யாதே
யானுலு மத்துவித நிலையைமற வாதே
யகம்புறமு மோருருவை யன்றியுண ராதே
தேனுடுங் காவின்மலர்த் தேனூறு பாயுந்
தென்கழனித் திருநெல்லை மின்பாத நாடே. (17)

இன்னலுறு முடலிருக்க வெண்ணுமெணம் போதும்
இருநான்கு சித்திகளி லிச்சைவைத்தல் போதும்
நன்னயமாஞ் சோதிடத்தி னுட்டமிளிப் போதும்
நல்லிரும்பு பொன்னுக்கு நசையதுவும் போதும்
பின்னமுறும் வைத்தியத்தைப் பெறுமாசை போதும்
பேதமுறு மிவைமுதலாம் பிராந்தியினை விட்டுத்
தென்னனுக்கு மலையனுக்குஞ் செல்வியென லாகுந்
தென்கழனித் திருநெல்லை மின்பாத நாடே. (18)

பார்க்கவொணு வல்குறனைப் படமெனலும் போதும்
பகரவொணு வூருவினை யரம்பையெனல் போதும்
ஆர்க்கவரு பிருகரத்தைக் காந்தளெனல் போதும்
அக்கினையுங்கால்கடமை வராலெனலும்போதும்
பார்க்குணிதந் தேய்பதத்தைப் பதுமமெனல் போதும்
பலநாளும் பெண்ணுலே பட்டதுயர் போதுந்

* திருக்கு ஆவாளை எனப்பிரித்துப் பொருள் கொள்க.

தீர்க்கரிய விவ்வரந்தை தீரும்வழி யாகத்
தென்கழனித் திருநெல்லை மின்பாத நாடே. (19)

நேரசைக் கட்டளைக்கலித்துறை

சீரா விருக்கும் பரமான வின்பச் சிறப்படைய
* நாரா விருக்க வரவாக் குறித்து நலிவதுபோல்
வாரா திருக்க வுருநாம நாடி வருநலிவு
பாரா திருக்க வரந்தா திருநெல்லைப் பைங்கிளியே. (20)

தீண்டா திருக்குஞ் சவம்போ லிருக்குமித் தேகத்திலே
யாண்டாண் டிருந்து மழிந்தோ மதுதிண்ண மாகையினுன்
மாண்டே சனித்தது வாகாம லுன்னடி வைத்ததனை
வேண்டா திருக்க வரந்தா திருநெல்லை மெல்லியலே. (21)

நிரையசைக் கட்டளைக்கலித்துறை

விடந்தாங்கு கண்டத்தர் மெய்யினிற் பாதி விடாமலுறைந்
தடங்கா தழகுரு வானவ ளேயடி யேனுமிந்தச்
சடந்தான் சுமந்துஞ் சலியாம லின்பொற் சரணின்மனம்
அடங்கா தரந்தையுற் றேனபி ராமி யடைக்கலமே. (22)

நேரிசை வெண்பா

உன்னுருவி லிவ்வுலகை முண்டா யிருந்தொடுங்க
முன்னும் பினுமிருந்த மூலமே - பின்னமற
வெவ்வுலகுந் தானு யிருந்தமவு னத்தலைவி
தவ்வுமனந் தீரவரந் தா. (23)

இந்த வுடற்சுமையை யேன்சுமந்து நொந்தலைந்தேன்
பந்தங் கடந்த பராபரையே - சுந்தரியே
வாங்குதற்கு நீயொருத்தி வல்லாளே வந்தசுமை
தாங்குவது மில்லைமெய்தந் தால். (24)

சித்த மிரங்கிலையோ சீர்நெல்லை நாயகியே
நித்தந் திருவடியை நீங்கினனே - சத்தமுதற்

* நார் - பழுதை

பஞ்ச விடயப் பழம்பகையைத் தீர்ப்பதென்றோ
துஞ்சுமுட னீர்வதென்றோ சொல். (25)

இன்னங் கிரகப் பிரவேச மெய்தாமன்
முன்னம் புகுந்தபுர மேமுடிய - வன்னமே
யன்ன மளிப்பா யதுவின்றேற் சூழ்காடி
யென்னத்தாற் பேத மெனக்கு. (26)

தோன்றுவரு மாயா துவந்துவமாஞ் சொப்பனம்விட்
டென்று தொலையுமெனக் *கென்றாயே - யன்றுவரை
நஞ்சுண்டோன் போலிருந்து நான்மெலிந்து வாடுதலிற்
றுஞ்சித் தொலைதல் சுகம். (27)

ஆகாத விவ்வுடலுக் காருதவி யம்மம்மே
போகாத துக்கம் பொருந்தியிடி - லோகோகோ
வுன்னை நினைத்தறிண்ண முன்னருளா லிவ்வுடம்பு
பின்னப் படுவதென்றோ பேசு. (28)

சுற்றத்தா ரின்னந் தொலைந்தா ரிலையெனவே
பற்றற்றே கைந்திருத்தல் பண்பாமோ - $கொற்றனுடல்
பாதி பரித்திருக்கும் பண்ணவியே யுன்னையடைந்
தீதிருக்க ஞாய மிலை. (29)

இருப்பதுபோ லேகரையு மிவ்வுடம்போ டென்று
மிருக்கச் சகிக்கவிலை யென்று - முருத்தெரியா
திவ்வுடலி லியிருந்த தின்றறிந்தே னின்னமெனக்
கிவ்வுடலா லெப்பயனு மில். (30)

தன்னை மறந் துன்மத்தன் றானடிக்க வந்ததுபோ
லென்னை மறந் தித்தேக மெய்தியதே - யின்னமிதாய்ப்
போவதழ கோவுனது பொன்னடிக்கே யாளாக
வாவ தழகோ வறை. (31)

இராகத் துவேஷமுடன் யாறுக்கை யோடிருந்து
மோகப் பிசாசாய் முடிவேனோ — பாகமற

*என்றாயே-என் தாயே. $ கொற்றன்-கொற்றவாளீஸ்வரன்

வெங்குஞ் சிதம்பரமா யின்புருவா முன்வடிவிற்
றங்கி யிருக்கவரந் தா. (32)

* சருமாதி யாறேடுஞ் $ சந்ததநா ருகம்
அருமையெனவெண்ணியலேவேனே-வொருமையுடன்
அல்லவெல்லா நீக்குமுன தம்பொற் றிருவடியிற்
புல்லுவது மென்றே புகல். (33)

அவ்வியமாய் நீங்கா வரந்தைசட மேவடிவா
மிவ்வுடம்போ டின்னு மிருப்பேனே - பவ்வமற
வுன்னு துரையாதே யுள்ளமழிந் துன் னுருவாய்ப்
பின்னமற நிற்பதென்றே பேசு. (34)

என்றும் பிணியுளதா யெந்நாளு நைவுளதாய்ப்
பொன்று முடன்மயமாய்ப் போவேனே - நன்றுதீ
தாமென் றுணர்வரிய வம்மையுன தம்பதத்தில்
¶ ஏமுறவே யானிருப்ப தென்று. (35)

மெய்போ லிருந்தழியு மின்போலும் பொய்யுடலை
மெய்யாக வெண்ணி மெலிவேனே - வையோவீ
தென்ன மயலைவைத்தா யின்ன மிரங்கலையோ
வுன்னுருவே நானாக வுன்னு. (36)

பாருளோரெல்லோரும் பார்த்துநிந்தைபண்ணுமிடஞ்
சோருமனத் தோடிருந்து சோர்வேனே - சாருமிட
மின்னதெனச் சுட்டறிவோ டெய்திலரி தாந்துரியந்
தன்னிலியான் சேர்வதென்றே சாற்று. (37)

---

* சருமாதி - சருமம், உதிரம், மாமிசம், சனுயு, அத்தி, மச்சை.

$ சந்ததம் நாறு ஆகம் - சதா (துர்க்கந்தம்) வீசுகின்ற உடம்பை.

¶ ஏம் - (ஏமம் என்பதில் அம் கடைக்குறை) இன்பம் என்று பொருள்.

¶ நாறுமுடலி யானெனவு நாடுமனை யென்னதென்றும்
மாறுபட வெண்ணி மயங்காதே - தேறரிய
வம்மை திருநெல்லை $ யம்போ ருகவடியை
யிம்மையிலே நாடி யிரு. (38)

ஆருறும் பொய்யா மதிற்பயனும் பொய்யாகு
மாருறும் பொய்யா வறிவதும்பொய் - யாருறு
கையானைத் தந்த கழனித் திருநெல்லை
மெய்யா மவள்சரண மேவு. (39)

அன்புசற்று மில்லாத வாயிழையார் மாமாயைத்
துன்பமுற்ற வாழியிலே தோயாம - லின்பரசத்
தேனூர் கழனித் திருநெல்லை யம்மைபதம்
நீநாளு நெஞ்சே நினை. (40)

ஆருறு நாடுமிடத் தப்பாலுக் கப்பாலா
யாருறு மோடி யறிவரிதா - யாருறுங்
காணற் கினனுகுங் காரணியைக் கன்னெஞ்சே
பேணற் குரித்தாப் பிடி. (41)

பிடியா யகநாட்டம் பேருகு மின்பம்
§ விடியா விருள்போய் † விழிப்பா - மடியந்த
மில்லா வெளியா யிருந்த படியிருக்க
நில்லா யதுவே நிலை. (42)

---

¶ "நாறுமுடலி" என இவ்விடத்தும், மேல் 45-வது வெண்பாவில் "நெடுநாளியான்" என்றவிடத்தும், கூவிளங் கனி, புளிமாங்கனியாகக் கொள்ளாமல்,

"சிருந் தனையுஞ் சிதையிற் சிறிய இஉ அளபோ
டாரு மறிவ ரலகு பெருமை"

என்ற யாப்பருங்கலக்காரிகை விதிப்படி குற்றியலிகரத்தை நீக்கி யலகிட்டு முறையே கூவிளங்காய் புளிமாங்காயாகக் கொண்டு வெண்டளையாமாறு காண்க; வெண்பாவிற் கனிச் சீர்வர விதியில்லாமையின்.

$ அம்போருகம் - தாமரை.

§ விடியா விருள்போய் – அஞ்ஞான அந்தகாரம் நீங்கி.

† விழிப்பு ஆம் – ஞானஜாக்கிரம் உண்டாகும்.

நிலையாமோ வில்லம் நிலையாமோ செல்வம்
நிலையாமோ மைந்தர்மனை நெஞ்சே - நிலையாமோ
வாகங் கரணாதி யத்தனையுஞ் சொப்பனமென்
றேக நினைவா யிரு. (43)

இருக்கா திகடேர்ந்து பின்புருவாந் தேவி
திருப்பாதஞ் சேருந் திறமாப் - பெருக்காகச்
சொல்லி லெறிகற் றுருவனிடம் போயிடினும்
அல்லலற மாட்டா தறி. (44)

அறிவே திருவுருவா மம்மை சரணப்
பிறியாது நின்றார் பெரியோர் - குறியாது
நின்றுயென் னெஞ்சே நெடுநாளியா னென்னதென்று
நன்றே சிவைவடிவை நாடு. (45)

நாடிப் பொறிகளைந்தி னுடோறு நாளும
லோடி யெடுத்தபல னென்றென்றே - கேடுதரு
முற்பத்தி நாசமுட னேகோகோ துக்கசுக
மற்பமல வெண்ணிறந்த வாம். (46)

ஆமே யவாவறுத்த லாமே யரந்தையொழி
வாமே யிரண்டுவினை யற்றிடுத - லாமேகாண்
வாசி யகமிறத்தல் வந்துவிடும் பேரின்பஞ்
சீசி யகமுகமே செல். (47)

செல்லா யிடர்நெஞ்சே தீநெறியி னுடோறுஞ்
செல்லிற் குறைபோந் திறமுண்டோ - நல்லோர்க
டேடற் குரித்தான தென்கழனி யம்மைபதங்
கூடி லுனக்கென் குறை. (48)

## பஞ்சாக்கரநாயகி வணக்கம்

நேரசைக் கட்டளைக்கலித்துறை

கண்ட பொருளல்ல காணப் பொருளல்ல கண்டபொருண்
மண்டு மருளல்ல மாயு மொளியல்ல மன்னுமொளி
பண்டென் பதுமல்ல வின்றென்ப தல்ல பராபரமா
யுண்ட மடங்க வடங்காப் பெருவெளி யையுளியே. (1)

## கொப்புடையாள் வணக்கம்

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பின்னு பின்ன மொன்றிலதாய்ப்
பெரிதாஞ் சத்தா சத்திலதாய்
முன்னு நின்ற நிரவயமாய்
முடியா திருந்த சாவயமாய்ப்
பன்ன வேது மில்லாமற்
பகரு மனுடக் கொம்பாகும்
அன்ன மாயை தனையகற்று
யம்மே கொப்பை யுடையாளே. (1)

மூர்க்க ரிணக்கந் தவிர்ந்திடென
முன்னோ ருரைத்த மாற்றமதைப்
பார்க்கி லுலகத் தொருவரிலை
* பாவி மனமே மிகமூர்க்கன்
றீர்க்கு முனது பதமகன்றே
தீன விடயத் தழுந்துகின்ற
தார்க்கு முயிரே யிதையகற்று
யம்மே கொப்பை யுடையாளே. (2)

$ ஆலோ னிறந்து முமைபாகத்
தண்ண லிறந்துங் கமலமுறை
நாலா னனத்தோன் முடிந்திறந்தும்
நார தாதி யோரிறந்துங்

---

* பாவிமனமே மிகமூர்க்கம் என்றும் பாடம்.

$ இங்கே ஆலோன் என்பது சந்திரனையன்று; திருமாலே: (ஆலிலையில் அறிதுயி லமர்ந்தவர் என்று பொருள்). ஞான வாசிட்டம் பிரகலாதன் கதையில் :-

**ஆலோ னுகிக் கண்வளர்ந்த ஐயா மெய்யா அருண்மூர்த்தி**
என வந்திருப்பது காண்க.

காலா திகளு மொழிந்திறந்துங்
ககன மாதி யழிந்திறந்தும்
ஆலோ கங்க ளிறந்துநின்று
யம்மே கொப்பை யுடையாளே. (3)

வேறு

ஓங்குதனி மருப்பானை யொருபாகன் கைவசமா
யுழன்ற தந்தோ
தூங்குபணைக் கரசயிலந் தனைப்பாக னெவற்றாலோ
துன்பஞ் செய்தான்
றுங்குமிருநிலத்தின் வினையிரண்டென்னும்வல்லியினுற்
றகைத்துப் பின்னு
மோங்கிவள ரிச்சையெனுந் தாம்பதனுன் மலக்குகையி
லுறுக்கிக் கட்டி. (4)

நல்லறிவு முதல்வீர மெலாமடங்க நாரியரா
நாகங் கவ்வ
வல்லையினிற்செலுத்தியபின் மகத்தான பெருந்தன்மை
மறக்கப் பொல்லாப்
புல்லறிவா மங்குசத்தான் மத்தகத்தி லடித்தடித்துப்
புன்மை செய்ய
வல்லலுறு மக்கயந்தா னியாதென்னில் யானுகு
மந்தோ வந்தோ. (5)

அப்பாகன் யாரென்னி லஞ்ஞான மென்பவனே
யவனை வெல்ல
விப்பாரி லெவ்விடத்துச் சென்றாலு முனையன்றி
யேதுங் காணே
னெப்பாரு மில்லாளே பூரணியே காரணியே
யோங்கு மேன்மைக்

கொப்பாளே யுன்னிடத்தில் வந்தேனென் பகைநீங் கக்
குறிக்க வேண்டும். (6)

வேறு

* தூசே தரிக்கி லொடியுமெனுஞ்
சொல்லே புனையுந் துடியிடையா
ராசைச் சுமையைச் சுமக்கவெனக்
கந்தக் கரணச் சும்மாடு
மாசி லாளே நீதந்து
மாறுச் சுமையாச் சுமக்கவைத்தா
யாசா ரிந்தச் சுமையிறக்கா
யம்மே கொப்பை யுடையாளே. (7)

உன்னைக் கதியென் றடையாம
லோகோ வுலக வாஞ்சையினு
லென்னே யிற்றை நாள்வரைக்கு
மிழிவாந் தொழிற்கே யிழுத்தல்கண்டாய்
பின்னை யெனக்கோர் கதியில்லை
பேசா திருந்தா லென்செய்வே
னன்னே யிந்த மதியகற்று
யம்மே கொப்பை யுடையாளே. (8)

நேரிசை வெண்பா

அப்பாய் நிலமா யனலாய் வளியாகிச்
செப்புங் ககனமாய்ச் சித்தாகிக் - கொப்புடையா
ணின்ற நிலையறியா நெஞ்சகமே யேன்பிறந்தாய்
பொன்று முடம்புறவோ போ. (9)

---

* தூசு – புடவை.

## §விஷ்ணு வணக்கம்

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

நடந்து விடுங்கா ணிருவினைகள்
நாரா யணாய நமவென்னில்
நடந்து விடுங்காண் பிறப்பிறப்பு
நாரா யணாய நமவென்னில்
நடந்து விடுங்காண் பகையுறவு
நாரா யணாய நமவென்னில்
நடந்து விடுங்கா ணகங்கரப்பேய்
நாரா யணாய நமவென்னில். (1)

**இருபத்தெண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

ஆசுற்ற குருதியது வீசவே சருமம
தடர்ந்தது திரண்டுவீழ
வத்தியது முண்டுமுண் டாகவே நின்றதுவு
மனவரத மெனையுறுத்த
நாசத் தசைகளவை மாசுச் சுமையாகு
நடுமச்சை யூழுளு
நாளு சளுயுவவை யூளுன தைச்சுற்று
நாடிற் பழிப்பாகுமே

---

§ விஷ்ணு வணக்கம் என்னும் இத்தலையங்கத்தின் பாடல்களின் சில விடங்களில், மூவசைச் சீர்களுக்கு ஈரசைச் சீர்கள் வந்து ஓசை குறைந்தும், வேறு இடங்களில் ஓசை கூடியும், ஏனைய தலையங்கங்களில் ஓரோவிடத்தும் இவ்வாறு காணப்படும். அருட்பெற்ற பெரியோர்கள் பாடலில் பொருளொக்க மொன்றே கவனித்தல் வேண்டும். தண்டியலங்காரத்தில் :-

"ஆரிடந் துள்ளு மவைபோல் பவற்றுளு
நேரு மென்ப நெறியுணர்ந் தோரே"

என்னும் சூத்திரத்தையும் உரையையும் நோக்குக.

யோசைத் தொழிலாதி யோரைந்து புள்ளுக்கு
முறைநின்ற கூடதாகு
மோரோன் பதுவாச லீரைந்து வாயுக்க
ளோடித் திரிந்துலாவுங்
கேசப் புழுக்களவை கூடிப் பலவுண்டு
கிருமிக ளனந்தகோடி
கீழ்வாச லோடிவரு மேல்வாச லேறியது
கீழே விழுந்துநெளியும்
வாசிக் குரங்கென்ப தோடிக் குதித்திடவும்
வன்பான தருவதாகும்
வானத்தி னீலமென மேகத்தின் மின்னலென
வாரியதின் மொக்குளெனலா
மூசச் சதாநாறு மாசுற்ற மலமென்ப
தொழியா திருக்குமிடமா
மோங்குகக னத்தினிடை பாங்கான விந்திரதனு
வுண்டா யொடுங்கல்போலா
மாசைக் கழுகென்ப தோடிப் படிந்திடவு
மசைவற்ற கட்டையாகு
மாங்கார மென்றமுளி வாங்கா திருந்திடவு
மாலயம தாகுமிந்த
நீசத் தொழிலுடைய பாவக் குடிலிதுவை
நினையா தகற்ற நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (2)

விஞ்சுநா கப்பதுமம் வந்ததென வெப்பொழுதும்
வீயாத சித்திநிடமாய்
வெளியாகி யல்லல்வடி வாகியே சந்ததமும்
வேறுகி நின்றமனதே

வஞ்சத்து வம்பேசு மிஞ்சத் தொடர்ந்தோடும்
வன்பாச கூவமுறையும்
வாராதி லிச்சையுமுன் வந்ததி லனிச்சையும்
வைத்துநித மாயுமாயுஞ்
சஞ்சலம தாகவே பஞ்சப் புரங்களவை
தம்மில்வினை யாடிநிற்குந்
தானே செகாகிருதி யாகியே நிற்குமிது
தானே செகத்தையெல்லாந்
துஞ்சும் படிச்செய்யு மிங்கார் தடுப்பரிது
சொன்னமலை தாக்கிவிடலாஞ்
சுழல்கின்ற வுததியும் பருகலாம் வெங்கனற்
றெரட்டே விழுங்கிவிடலா
முஞ்சலென வுலைகின்ற நெஞ்சமதை யொருவரும்
முழுவலா தடக்கவரிதா
மோகோ விதன்பெருமை யொன்றோ வனந்தவித
மொருபிரம சாகரத்தி
னெஞ்சுருவ வயனுதி யானவிவ் வகிலமெனு
நேரான திரைகளாக்கி
நிமிடத் தழித்துவிடு மிந்தவலு மனதைநா
னிலையா தறுக்கவெளிதோ
கொஞ்சத் துவமான தஞ்சுகொடி கட்டுவது
கூடாது கூட்டுவிக்குங்
குறையன்றி நிறையாது மறைசென்ற வழிசென்று
குறையாத தாகுமிந்த
நெஞ்சப் பகையுமித னஞ்சுத் தொழில்களையு
நிலையா தறுக்கநினைவாய்
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (3)

வாங்காது சிறுபணி தாங்காது கிட்டினரை
வாய்நின்ற தந்தமதனால்
வன்பாய் நலிந்தவுடன் முன்பாய் நடந்தகதி
மாண்டுவிட மேலதாகித்
தாங்காது வந்தவிட மோங்கா திறங்குபடி-
தக்கதொரு மந்திரங்க
டம்மா லழிப்பதென வென்னையொரு பெண்ணரவு
தாவிக் கடித்ததந்தோ
வாங்கால நீங்கிவிடி லழிகாலம் வருவதென
வந்தோ வடர்ந்தவிடமு
மடியான வதுதொட்டு முடிவரையு மிகவேறி
யல்லலொடு போராடுதே
யீங்கார் பொறுப்பரிதை யென்னு லிறக்கரிது
விந்தவிட மாற்றவுரியா
னிவனென்ன வெண்ணியுனை யின்றடைந் தேனிந்த
விடையூறு ரூபமாகி
நீங்காத காமனுயிர் தாங்காது கொல்வனவ
னிந்தையை யறுக்கநினைவாய்
நினையா திருந்துவிடி லெனையா தரிப்பதெவர்
நீதா னொருத்தனின்றிப்
பாங்கான தந்தையிலை நீங்காத வன்னையிலை
பார்க்கிலுற வொன்றுகாணேன்
பட்சத் துடன்றேடி ரட்சிப்ப துன்னுடைய
பாரமிதி லையமில்லை
தூங்காது தூங்குவது தாயோர் தமக்குளது
சொல்கின்ற காமனுடனே
தூங்கப் பிறர்செல்வம் வாங்கக் கொடிக்கட்டிச்
சுற்றிச் சுழன்றவென்னை
நீங்காத வுன்னருகி லெந்நேர மெப்பொழுது
நிலையாக வைக்கநினைவாய்

நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (4)

ஆரொருவ ரிணையற்ற சீருடைய வஸ்துவிடை
யாங்கார மென்றவலகை
யல்லிற் பழுதையிடை பல்லிற் கொடியவிட
வரவுவரு மாறுவந்து
சீருடைய வேதத்தை யாராய வஞ்சுமது
திரர்க ணடப்பதெல்லாஞ்
சிறுமையெனவெண்ணியே தன்னுடையதொழிலையே
திரமாக வெண்ணிநாடிப்
பேர்பெரிய ரென்னுநஞ் சீர்பெரிய தென்னுநம்
பேராத வாழ்வதென்னும்
பெண்ணிலொரு மலடிகைப் பிள்ளையெனும்ரூபமாய்ப்
பிரித்தறியி லில்லையாகு
நேரான வகிலத்தி லுறைகின்ற சீவர்களை
நிலையா தலைத்துவிட்டு
நீநா னெனப்பேசி யானுதை துன்பமதி
னிமிடத் தழுத்துவிக்கு
மாரோ விதற்கிந்த வனியாய வதிகார
மளித்திட் டகன்றதந்தோ
வாவா விதன்பெருமை யயனாதி தேவர்களு
மறியவரி தாகுமாகும்
பாரதனி னம்மைவிட வார்பெரிய ரென்றுமிகு
பாழான நட்டமிட்டுப்
பங்கேரு கன்பாலு மங்கேச வன்பாலும்
பாராதி கொல்வனிடமுஞ்
சாராதுசார்ந்தவர்க டமையக் காதுறையுந்
தமியே னுளங்காணியாய்த்

தன்னரசு நாடுபெற் றென்னையு மயக்கிய து
    தாழ்விக்கு நரகிலிந்த
நேராத ராவணனை நின்கருணை யம்பு கொடு
    நிலையா தறுக்கநினை வாய்
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
    நீண்மாயை யுடைமாயனே. (5)

பண்டில்ல மேவியறி வுண்டான தொழில்களவை
    பண்பாய் நடத்திவருகிற்
பரிவான தந்தையனை மக்களொடு சுற்றமிவள்
    பாரியென வந்தவிந்த
வண்டக் கயவருட னென்றிடிற் சந்ததமும்
    வலுநரகின் வீழ்வமென்று
மனதிலொரு பித்திதனை விட்டுநா மோட்சமடை
    மார்க்கமெது வென்றுதேடி
யண்டரொடு முனிவரரு மேத்தற் குரித்தான
    வருளுருவ மானகுருவுக்
கன்பென்னு மலரெடுத் தர்ச்சனை நிதஞ்செய்து
    வடியிணைகள் போற்றிநின்று
தொண்டரென வவரேவ லெப்போது முடிசூடித்
    துகளற்ற சித்தனாகித்
தூய்தான குரவரவர் சித்தபரி பாகமது
    சோதித் தறிந்துபின்பு
கொண்டாடி யிவருக்கு வானவரு மறிவரிய
    குறைவற்ற பொருளையியக்
குணமதுடன் வாங்கியதை யிப்புருட ரானவர்கள்
    கோதின்றி நின்றுமதனைக்
கண்டார்க ளிந்தவித நாயிற் கடையான
    கசடனிறு மாப்படைந்து

கண்கெட்ட பகடாகி யனவரத மாதருடை
காலிடைக டேடிநைந்தும்
வெண்டிங்கள் வதனமுடை மின்னார்கள் சொன்னபடி
விலகாது செய்துநின்றும்
வெகுகால மிந்தவிதம் வீணாள் கழிக்கின்ற
வினையேனை யாள்வதென்றோ
ரெண்டுபோ லலைவுற்ற மனமிலா வடியரக
நீங்கா திருந்தவறிவே
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (6)

ஓரில்வரு பூதங்க ளோரைந்து மனமாதி
யோரைந்து சத்தாதியா
மோரைந்து வாக்காதி யோரைந்து பிராணாதி
யோரைந்து சருமமாதி
நேரிலொரு மூன்ருகு மிவைமூன்று பத்தொன்று
நிகழுபிர மாதியைந்து
நிகழுமிவை யாருறி னிச்சயம தொன்ருகு
நிலையாத வேழைந்துமாம்
பாரிலொரு சற்புருடர் சீரிலிவை யேழைந்தும்
பாழெனவறிந்துவிட்டுப்
பதியான வொருபொருளை மதியா லறிந்துணர்வு
பற்றிநிலை நிற்பரமமா
சீருடைய சின்மயனை மேருவென வசையாத
சித்தாந்த மானபொருளைத்
திரா டமக்குரிய மூடா டமக்கரிய
சின்மயா னந்தவடிவை
யாருமறி யாதபொரு ளாய்நின்ற பேரறிவை
யண்டபகி ரண்டநிறைவை

யத்துவித மானவனை யெத்திசையு நின்றவனை
யணுவிலணு வாகினனைப்
பேரா திருந்தபரி பூரணம தாகின்ற
பேச்சற்ற மோனவடிவைப்
பெற்றும் பெருமலே கத்தித் திரிந்துநான்
பெரிதான குருடனாகி
யாரொருவ ரிணையின்றி நாரிவச மெங்நேர
மல்லுபக னட்டமாகி
யலைகின்ற வீனனுனை யென்றைக் கடைந்துநிலை
யதுவாவ தெந்தநாளோ
நேரொருவ ரில்லாத பேரறிவு தனுவான
நின்மலா னந்தமயனே
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடை.மாயனே. (7)

ஆழமொரு மட்டின்றி நீளம திலக்கின்றி
யகலங் கணக்கற்றதா
மறிவென்ற வானந்த வாரியினி லனவரத
மயனாதி முனிவோர்களு
மாழியொரு சத்தவித மென்பனவு மட்டகய
மவையோடு மாதிசேட
னகிலாண்ட பிண்டங்க ளாகாய வீதிவரு
மாதபனும் வெண்டிங்களுந்
தாழ்வொன்று மில்லாத வட்டகுல வெற்புமொரு
தடையற்ற ககனாதியுந்
தண்ணென்ற கங்கையைது முதலான நதிகளுந்
தாழ்வற்ற துருவவிறையுங்
கீழான சரவசர வுயிர்கள்பல யாவையுங்
கெம்பீர வுததிதன்னிற்

கிளர்கின்ற வலைகள்போற் றோன்றியே வருமிவை
கிளத்தவொரு வேதுவற்று
வாழ்கின்ற விவையலைகள் போலவே தோன்றியதின்
மாயுமென வேதமறையில்
வந்தவொரு வயனுநி முந்தவா னந்தகன
மயமாவ தையமில்லை
பாழான துன்பமதி லாழும் பிராந்திகொடு
பார்க்கிலிப் போதுசுகமாம்
பண்டையுண் டானசுக மதின்மீண் டடங்குமது
பார்க்கிலப் போதுசுகமாங்
கேழ்கிளரு மிந்தநெறி நில்லாது தேகமது
கெடுகாலம் வந்தபோது
கீழான புத்திகொடு துன்பமய மாகியுங்
கெட்டே னெனப்பகர்ந்து
நீழலென வறியாது வீணுட் கழித்தவெனை
நின்னடிய னுக்கநிணைவாய்
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (8)

நிர்ச்சிவ னுகியக றற்போத மாகிநவி
விர்நாம ரூபனுகி
நிர்லேப னுகிநித நித்தியா னந்தமெனு
நிராதார மோனவடிவாய்
நிர்த்தோஷ னுகியனு வாகியே யெப்பொழுது
நிஷ்கிரிய னுகிநின்று
நித்யாப ரோட்சமாய் முக்கால ரகிதமாய்
நிரவயவ மானபொருளாய்
நிர்க்குண விலாசமா யெச்சருவ கெதனுகி
நிருபத்திர னுகிநின்று

நிரிந்திரியா காரமாய்ப் பொருந்தலரி தாகிய
நிரானந்த ரூபமாகி
நிஷ்கார ணனுகியப் பிரவிர்த்த னுகியே
நிர்விஷய சுத்தனுகி
நிறைவான விபுவாகி யசலனு யகேயனுய்
நிரஞ்சனு னந்தவறிவாய்
நிர்மலா னந்தனு யெம்மாசு ரகிதனுய்
நீண்மன தகோசரமதாய்
நெஞ்சமொடு தெவ்வற்ற தேகமொரு ரூபமாய்
நிரதிசய மானபொருளாய்
நிர்ச்சங்க வடிவமா யெச்சங்க நாஸ்தியாய்
நீங்காத சத்துவடிவாய்
நெடிதான திரிசிய வதீதனு யனவரத
நிர்மூட வஸ்துவடிவாய்
நிர்ப்பூத வாகமா யெப்போது மழியாது
நிலையான பிரமவடிவாய்
நீநா னெனக்கூறு பேதமது வின்றியே
நிர்த்தொந்த மானபொருளாய்
நிர்த்தரங் கப்புணரி யாய்நின்ற ராமனே
நீசனேயு மாள்வதென்ருே
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந்தர மாகு
நீண்மாயை யுடைமாயனே. (9)




அறிகின்ற விசுவாதி யபிமானி மூன்றெனவு
மாகமொரு மூன்ருவது
மவத்தைதிரி விதமெனவு மாகநவ விதமான
வவையோடு கூடுபுருடன்
பிறியாத விடமுதற் பதவாச்சி யார்த்தமாம்
பேராத வுயிரிலட்சியம் ...

பேதமது வின்றிய விராட்டாதி மூன்றுதனு
பெரிதாஞ் சிருஷ்டியாதி
யறைகின்ற மூன்று மவத்தையொடு வைசுவா
னரனாதி யானமூன்று
மபிமானி யாமென்ப ராகஙவ விதமான
வவையோடு கூடுமீச
னறைகின்ற திவைநடுப் பதவாச்சி யார்த்தமா
மழியாத பிரமம்லட்சிய
மாதார பரனாதி யானவொரு மூன்றுமே
யபிமானி யாகுமென்பர்
நிறைகின்ற சர்வசுக மாதியா மூன்றனையு
நிலையா மவத்தையென்பர்
நீங்காத வஸ்திபா திப்பிரிய மூன்றுமிவை
நிகழுஞ் சரீரமென்ப
ருறைகின்ற விந்தவித மொன்பதுட னுங்கூடு
மொருபரப் பிரமமென்ப
தொன்று யிருந்தவசி பதவாச்சி யார்த்தமா
மொருசர்வ சாட்சிலட்சிய
முறையா லெடுத்திங்ங னறைமூன்று வாச்சியமு
முழுமித்தை யென்றுதள்ளி
மூன்றுன லட்சியமு மொன்றென வறிந்துபினு
மோனத்தி லவையும்விட்டு
நிறைகின்ற பூரணம தாகின்ற வாரியர்க
ணிலையிலெனை வைக்கநினைவாய்
நிர்ச்சுதந் தரமாகு மெய்ச்சுதந் தரமாகு
நீண்மாயை யுடைமாயனே. (10)

## போற்றி சங்கிர்த்தனம்

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அந்நாளி லிராக்கதரை யறுத்தாய் போற்றி
யம்பரத்தி லும்பர்களுக் ககமே போற்றி
யிந்நாளி லெனதகத்துட் *டிமிரவீன
மீடழிக்கக் கோடி $யின னுனைய் போற்றி
பன்னாளு மடியார்கள் பவத்தை நீக்கும்
பரிசாகத் திகிரிக்குப் பணித்தாய் போற்றி
நன்னாளு மிடர்நாளு மடியாருக்கு
நற்சுகமா மென்றுசங்கை நலிந்தாய்போற்றி. (11)

எவ்விடமு மசுத்தமென வெண்ணி நீயு
ழு மெழுவாரி தனிலொன்றி லிருந்தாய் போற்றி
யவ்விடமு மசுத்தமதாம் பிரளயத்தி
லழிவதினு லெனவெண்ணு மையாபோற்றி
யிவ்விடமு மிப்படியோ வென்று விட்டே
யிரவுபக லற்றவகத் திருப்பாய் போற்றி
யவ்விடமே யெல்லாமாய் நின்ற தாலே
யதற்கசுத்த மிலையென்றே யமர்ந்தாய் போற்றி.

ஆனைகண்ட குருடரைப்போ லறிந்த பேர்க்கு
மப்பாலா மேகனு மறிவே போற்றி
† தானையது ‡ விரணியத்தாற் றரித்தாய் போற்றி
சராசரமா முலகமெலாந் தந்தாய் போற்றி
யானையதின் கோடதுபோற் கொங்கை யுள்ள
வணிமடவார் வாஞ்சையெலா மறுப்பாய்போற்றி

---

* திமிரம்—இருள். $ இனன்—சூரியன்.
ழு எழுவாரிதனிலொன்று - திருப்பாற்கடல்
† தானை - வஸ்திரம் ‡ இரணியம் - பொன், (எனவே பீதாம்பரம் என்று பொருள்.)

யூனையபி மானித்தே யுழல்வேன் றன்னை
யொப்பிலா வுனக்கேயா ளாக்காய் போற்றி (13)

காண்பானுங் காண்பவையு மானாய் போற்றி
கருத்தனுமொண் கருமமுமாய் நின்றாய் போற்றி
பூண்பானும் பூண்பனவு மானாய் போற்றி
பொல்லாத மாயையிலாய் புணர்ந்தாய் போற்றி
மாண்பான மாயவனாய் நின்றாய் போற்றி
மகாசூர குலாந்தகனாய் நின்றாய் போற்றி
வீண்பயிலும் விழற்கிறைத்து வீணா டள்ளும்
விரகிலேற் கருள்புரியும் விறலாய் போற்றி (14)

ஓருருவாய் மூவுருவா யுறைந்தாய் போற்றி
யும்பர்கடம் பெருமானே யுயிரே போற்றி
காருருவாய் நிறைந்தபெருங் கடலே போற்றி
கண்முதலாம் பொறியாலுங் காணாய் போற்றி
பாருருவாந் * தந்தியது பதைத்த போது
பதைப்பறவே யங் § கராப் படுப்பாய் போற்றி
யாருமறி யாதவிட மகமாய் நின்ற
வாதவனே யடியனையாள் போற்றி போற்றி. (15)

மனமாதி யாருலு மறியா தான
மாயோனே மகத்துக்கு மகத்தே போற்றி
யினனாதி புழுவரையு மிருப்பாய் போற்றி
யிருக்காதி வேதங்கட் கெட்டாய் போற்றி
பினமாகி யபினமுமாய்ப் பேரா தாகிப்
¶ பேச்சிறந்து பிறங்குகின்ற பிரானே போற்றி
கனமான வரக்கரெலா மடியற் றேகக்
கைப்பாண மெடுத்தெய்த காரே போற்றி. (16)

---

* தந்தி என்பது இங்கே கஜேந்திரன்என்னும் யானையை.
§ கரா - முதலை. ¶ பேச்சு இறந்து - வாக்கினைக் கடந்து.

* திறிபுடியாந் திமிரத்துக் கப்பா னின்ற
    $ திவாகரனே யடிபோற்றி திருக்கே போற்றி
யறிவறியா மையுமாகி யதித மாகு
    மப்பனே பூரணமா மருளே போற்றி
தறியாகு மாகமதை யசைத்தல் செய்யுந்
    தயாபரனே யடிபோற்றி தமரே போற்றி
குறியாது குறித்தறியும் பெரியோருள்ளக்
    கோகனதத் துறையளியே குரவா போற்றி. (17)

" அன்பிலா மான்மருப்பை யடியோ டீர்த்தே
    || யன்பான வாரணத்தை யளிப்பாய் போற்றி
புன்புலால் விசுகின்ற புரங்க டங்கும்
    புல்லறிவுக் கெட்டாத பொருளே போற்றி
முன்பனுய் மூன்றுலகும் புரக்கா நின்ற
    முகுந்தனே யடிபோற்றி முதல்வா போற்றி
தன்பெருமை யறிந்துணர்ந்தோர் சகாயா போற்றி
    தனக்கிணையொன் றில்லாத தனுவே போற்றி. ()

அன்றுலிற் றுயின்றவனே யடிகள் போற்றி
    யைம்பத்தோ ரக்கரங்கட் கதிதா போற்றி
நன்றுலுந் தீதாலு நலியா தான
    நாரணனே யுனதுபத நளினம் போற்றி
பொன்றுத பிரமனுக்குந் தந்தை யாகும்
    புனிதனே புயங்கவணை துயின்றோய் போற்றி

---

* இழ்வருமெதுகைநோக்கித் திரிபுடி என்றது திறிபுடி என்று மருவிற்று. $ திவாகரன் — சூரியன்,

" அன்பிலாமான் — குவலயாபீடம் என்னும் குஞ்சரம்; மான் என்பது விலங்கின் பொதுப்பெயரே யாயினும், "மருப்பை யடியோடீர்த்தே" எனப் பின்வருவதுகொண்டு குவலயாபீடம் என்னும் யானையைக் குறிக்கிறது.

|| அன்பான வாரணம் — கஜேந்திரன் ; வாரணம் — யானை.

யென்றுதை யன்னையுடன் சுற்ற மாகு
மெழிலான சீதரனே யிறைவா போற்றி. (19)

கல்லாத கயவருறு கூட்டந் தன்னிற்
கலந்திருந்த வெனையழைத்த கரமே போற்றி
செல்லாத மாயையிருண் மயக்க மெல்லாஞ்
சிரணிக்கத் திறந்தந்த திண்டோள் போற்றி
வெல்லாத பகையுறவு வெல்வ தற்கு
விழிக்கருணை தந்தவொரு விமலா போற்றி
மல்லாரு * மரவமெனுங் கொடியோன் றன்னை
மாயாது மாய்த்தவொரு வள்ளால் போற்றி. (20)

இடையிடையிற் றனிச்சொற்பெற்ற
விரண்டடிக் குறட்டாழிசை.

செல்வச் செருக்கிற் றிரமா வழுந்தினேன் ராம ராம-வீது
தீர்வது மில்லை திருவரு ளன்றியே ராம ராம
பல்வழி செல்லிற் படர்மத மேறுதே ராம ராம-நின்
பார்வைய தன்றிப் பகர்மதந் திராதே ராம ராம. (21)

உற்பத்தி நாச † வுததி யழுந்தினேன் ராம ராம-வீதற்
குன்னரு ளன்றி யொரு§வங்கங் காணேனே ராம ராம
வற்பத்தி லாசை யனுதினங் கொண்டேனே ராமராம-விந்த
வாசைப் பிசாசுன் னருளன்றி நீங்காதே ராம ராம. (22)

அன்னை யுதரத் தவஸ்தைகள் பட்டேனே ராம ராம-வினி
யாற்றேனே நீயவை யற்று விடவேண்டும் ராம ராம
பின்ன வபின்னப் பிணக்கதற் காளானேன் ராம ராம-விந்தப்
பின்ன முனதரு ளன்றிப் பிரியாதே ராம ராம. (23)

---

* அரவமெனுங் கொடியோன் - துரியோதனன்.
† உததி - கடல். § வங்கம் - கப்பல்.

ஙங்காக் கருவி நிபங்க ளொழிந்தவே ராம ராம-வுன்
னித்திய மான நிலைய தடைந்ததால் ராம ராம
வாங்கார மென்னு மலகை யகன்றதே ராம ராம - நின்
னுதார மான வவிழ்த மருந்தவே ராம ராம (24)

உண்டே யுறங்குவ துண்மையா நம்பினேன் ராம ராம-நின்
னுண்மையறிய வொழிந்தவை நீங்கின ராம ராம
பண்டே யிருந்த பயங்க ளொழிந்தன ராம ராம-நின்
பாத மலரிற் பணிந்த திடத்தினால் ராம ராம (25)

## சொரூப வணக்கம்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

இந்த வுலக சராசரங்க
ளியாவ னிடமாத் தோன்றியிடு
மிந்த வுலக சராசரங்க
ளியாவனிடமா விளங்கியிடு
மிந்த வுலக சராசரங்க
ளியாவ னிடமா வடங்கியிடு
மந்த மூல முதற்பொருளை
யகத்தெந் நாளும் வணங்கிடுவாம். (1)

எண்ணற் கரிய சித்திரமோ
ரேக படத்தி லிருப்பதுபோற்
பண்ணற் கரிய சீவேச
வுலக மிருக்கும் பரவிசும்பே
மண்ணைப் புனலை யனல்காலை
வானைத் தருசங் கற்பசத்தி
நண்ணிப் பொருந்து மூன்றவத்தை
நாளும் விளக்குஞ் சின்மயமே. (2)

சுட்டு மறிவு கெட்டசுக
சமனுந் துரிய நிலைமேவி

யிட்டத் திருந்த தன்மயத்தோ
ரிதயாம் பரத்தி லிலங்கொளியே
யெட்டுத் திசையோ டண்டமெலா
மெங்கு நிறைந்தி தெல்லாமாய்த்
துட்டக் கருத்திற் றூரமதாய்த்
தூயோர்க் கணித்தாந் தொல்பொருளே. (3)

இங்கே சரிக்கு மெறும்பாதி
* யெண்ணம் பகத்தோ னிறிதயத்
தங்கங் கிருக்குந் தற்சாட்சி
யான வகண்ட பூரணமே
† கங்கே யிழுக்கும் வெறும்பிணம்போற்
கனக மனைவி § கான்முளையோ
டிங்கே குடும்பச் சுமையிழுப்போ
ரிதயத் தெட்டா விரும்பொருளே. (4)

எல்லா மிறந்த நிலையாகி
யானு யெனது கற்பிதமா
மெல்லா மாகி யல்லவுமா
யிருந்து விளங்கு மின்னமுதே
பொல்லே னவிவே கத்தாலே
புன்மை விடய மாக்கரைந்தே
யல்லற் படுவ துனக்கழகோ
வத்தா வண்ணு வாரணனே. (5)

சித்தத் திருக்குஞ் சிதாகாச
தேவே தேவ தேவதையே
பத்துத் திசையும் பதினுலு
லோக மெங்கும் படரொளியே

---

* எண்ணம்பகத்தோன் - பிரமன் (அம்பகம் - கண்)
† கங்கு - பருந்து, கழுகு.
§ கான்முளை - புத்திரன்.

முத்திக் கரசே யாறுறின்
மூலப் பொருளே ‡ மோனசுகம்
புத்திக் கேதந் தவிர்த்தடிமை
பொருந்த வருள்வாய் புண்ணியனே. (6)

---

## அருளிறை வணக்கம்

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.**

சகந்தனிலே * பிறந்திறந்து வீணாக நாட்கழித்துத்
தவித்த வென்ற
னகந்தனிலே யிருக்கின்ற பரவடிவை யானறிய
வன்பு வைத்துச்
சுகந்தனிலே மேலான சுகம்பரம சுகமென்றே
தோன்றக் காட்டும்
உகந்தகுரு தேசிகனை யனுதினமு மிருதயத்தி
லுட்கொள் வேனே. (1)

வேறு

பொறியா ருலுங் காண்பரிய
பொருளோ யுனது பதம்போற்றி
யறியா நின்று மறிந்திலனு
யானு யுனது பதம்போற்றி
‖ பிறியாப் பிறியத் தப்பாலாம்
பெரியோ யுனது பதம்போற்றி
சிறியே னறிவுக் கறிவான
சித்தா முகந்த குருபோற்றி. (2)

வேறு

பத்தி யுடைய வமரர்பெறும்
பைம்பொன் னுட்டி னினிதான

---

‡ அடிமை புத்திக்கேதந் தவிர்த்து மோனசுகம் பொருந்தவருள்வாய் எனக்கூட்டுக.

* பிறந்துவந்து என்றும் பாடம்.

‖ எதுகை நோக்கிப் "பிரியாப்பிரியம்" "பிறியாப் பிறியம்" என வந்தது.

சித்தி விளங்குங் காவிரிசூழ்
செல்வப் பொருள்வை மாநகரோன்
புத்தி யிலனு மெனதுபவம்
பொருள தாகக் கொண்டினிய
வத்து விதத்தை யளித்தவுகந்
தானை வணங்கித் துதித்திடுவாம். (3)

கடலே ஞான வேதாந்தக்
கரும்பே யெனக்கோ ரருந்துணையே
யிடரே யருகு மாறெனக்கோ
ரிச்சை யேதுன் கழலல்லா
லுடலே பொருளே யாவியெனு
முகந்தாய் மூன்று முனக்கென்றுற்
படரும் வினையை யகற்றியருள்
பரிபூ ரணவுன் பதம்போற்றி. (4)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

§ முத்துவெண் ணகையார் சித்தம தொக்க
முயல்வதே கருமமென் றுன்னிப்

---

§ இச்செய்யுளுக்குத் திருப்போரூர்ச் சந்நிதி முறையிலுள்ள:-

ஒருபொரு ளிடத்தினிற் சச்சிதா னந்தமுட
னுருவநா மமுமுள்ளதென்
றுரைதந்து முன்னர்பின ருண்டாய் விளங்கியுறு
பிரியமா யுளமூன்றுளே
மருளிரிய வருமெய்ம்மை யுருவநா மம்பொய்மை
வன்பழுதை யுரகவுருவின்
மாறு தறிந்திடுதி பின்பழுதை நன்று
மதித்தவர்க் கரவின்மையின்
இருளறும் பிரமமே நிகழுமற் றெருபொருளும்
எதிரிட் டிலங்காதென
ஏழ்பிறவி வாரிதியி லாழுமெனை வாவென்
றெடுத்தரு ளளித்தகுரவா
தெருளுறுங் கலைமுனிவர் பரவுபோ ரூர்முருக
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே

என்ற அமுதவாக்குச் சிந்திக்கத் தக்கது.

பித்தரின் மயங்கிப் பிறவியங் கடலிற்
பிழையுற் றழுந்துறு வேனைச்
சித்தம தொக்க வாவென வழைத்துத்
திகழுநீ பிரமமென் றருளு
முத்தம குருவே பொருள்வைமா நகர்வா
ழுகந்ததே சிகசிகா மணியே. (5)

பிள்ளைக ளூறு பிழைகள்செய் தாலும்
பெற்றவர் தனயரை முனிந்து
தள்ளுத லுலகி லுண்டுகொ லடியேன்
றவறினைப் பொறுத்தருள் புரிவா
யெள்ளுறு மிடமும் பிரிவிலாப் பொருளே
யெந்தையே யென்னுயிர்த் துணையே
யுள்ளுதற் கரிய பொருள்வைமா நகர்வா
ழுகந்ததே சிகசிகா மணியே. (6)

ஏமநற் கிரியை வலஞ்செயுங் கதிரோ
னெழுவதன் முன்னமே யெழுந்து
சேமநீர் படிந்து செபித்துனைப் பரவுஞ்
செனனமே யெனக்குநீ தருவாய்
காமனை யெரித்துக் காலனை யுதைத்துக்
கஞ்சனற் சிரநகத் தரிந்த
வோமெனும் பொருளே பொருள்வைமா நகர்வா
ழுகந்ததே சிகசிகா மணியே. (7)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

உகந்தா னெனும்பே ரின்பவுரு
வோரா கமதா யெழுந்தருளிச்
சகந்தா னறிய வெனையாண்ட
தாயே வீர பத்திரப்பே
ருகந்தே தரித்து மோருருவ
மொருநா மங்க ளொன்றுமிலா

தகந்தான் புறந்தான் கீழ்மேலென்
றறுதிக் கடங்கா வம்பரமே. (8)

* ஒன்றும் வேண்டா வுலகாள
வுண்மை மகுடந் தரித்தடியார்க்
|| கென்றுந் தம்மை மறைத்தவிரு
ளிரிய விளங்குந் § திவாகரனே
நன்று திதோ டியானெனது
நாடு நாம வுருவனைத்துஞ்
சென்றே யலையா திகள்போலச்
சேருஞ் சிவமாஞ் சாகரமே. (9)

காண்டற் கரிய சிவனனு
வாகுங் கரண ரிகட்கெல்லா
மாண்ட விந்தச் சூக்கவணு
மகத்திவ் வணுவுக் கணுவுருவே
வேண்டிப் படியிற் றெழுந்தெய்வம்
விள்ளற் கரிய பேதமிவை
காண்டற் குரிய தெய்வமதைக்
காட்டுந் தேவ தேவதையே. (10)

செய்வான் செய்விப் பவன்செய்கை
செய்யுங் கருவி தொழிலைந்து
மெய்யாய் விளங்கும் பரமாக
மெய்யா வுரைத்த மெய்யுருவே
யெய்யா வெவைக்கு மகத்தாக
விருந்த சுத்தந் தனையடக்கி
யையா வகண்ட பூரணமா
யடங்கா மகத்தோ மகத்துருவே. (11)

---

* ஒன்றும் வேண்டாவுலகு - முத்தி
|| என்றும் மறைத்தவிருள்-அநாதி அஞ்ஞான அந்தகாரம்.
§ திவாகரன் - (ஞான) சூரியன்.

துச்சக் குகையா மைங்கோசத்
துன்ப வுருவின் மறைந்திருந்த
புச்சப் பொருளீ தெனக்காட்டும்
புரணு னந்தப் பழம்பொருளே
யச்சப் பிறவி மரணமெனு
மாழி கடக்க வேழைதனக்
கிச்சை யின்றி யருளுருவா
யெழுந்தே யொளிரு மரக்கலமே. (12)

ஏகப் பொருண்முப் பதமாக்கி
யிருமூன் ருக்கி யொருமூன்றை
யேகத் தள்ளி யொருமூன்றை
யேக மாக்கு மென்மயமே
மோகத் தழுத்து மேழ்பூமி
முற்றுங் கடந்து மோகமறும்
யோக நிலமே ழேறியதி
னுறுவாழ் வளிக்குங் கற்பகமே. (13)

தன்னைக் காணு வறிவாலே
சகத்தைப் பேத மாக்கண்டே
யென்ன திதியா னிவனென்னு
மிடருற் றுழன்றே னெங்கோவே
யன்ன மயக்க முன்னருளா
லகன்றே சகமென் கற்பிதமா
மென்னை யன்றி வேறன்றி
யானுக் கண்டே னென்கண்ணே. (14)

இந்த வுடலோ டாவிபொரு
ளெல்லா மித்தை யிவைவாங்கி
யந்த மில்லா வுன்வடிவை
யடியேற் கருளுந் தாதாவே

கந்த விடய மாதியைந்துங்
கைக்கொண் டருந்தி நீயிருக்க
எந்த மதியா லியான்புசித்தே
னென்ன லாகு மிறையோனே (15)

ஆகா சாதி தேகாந்த
மான சகத்துன் கற்பிதமே
லேக வறிவா முன்வடிவே
யிவைக்கும் வடிவ மென்றுயே
மோக மறமுன் சொன்னவைகண்
முழுது நீயாய்த் தோன்றிவிடி
னேகு நீநா னீதெனலு
மெங்கே போத தேவதையே. (16)

தன்னை யுணரு முணர்வின்றித்
தானும் பொய்யாங் கோசமைந்தும்
பின்ன மின்றி யிருந்தபடி
பின்னு மளிக்கும் பேரருளே
பொன்னங் கிரியு மணுவுருவும்
பொதுக்காட் சியிலே சமநிலையா
மென்னை யென்னு லெனக்களித்தா
யெந்தா யென்ற னுயிர்க்குயிரே. (17)

ஆரா வருந்தல் பொருந்தலிரண்
டருமை பெருமை யெனப்புசிக்கு
மோரா வெனக்கிவ் விரண்டோடு
முடம்புஞ் சுமையென் றுரைத்தவனே
யாரா விந்தப் பாரமெனக்
காமோ நானுன் கற்பிதநீ
பாரா திகட்கும் பரகர்த்தா
நீயே யிவைக்கும் பகவானே. (18)

கடம்போ லிருக்கு முடம்போடு
　　கரணங் காணுங் கரியானேன்
அடங்கா வகண்ட சிவமானே
　　னந்தோ வெல்லா மானேனே
யடங்கா மமதை யகங்கார
　　மகந்தை யிருக்கு மாலயமாங்
கொடும்பா விகடந் நெறியடியார்
　　கூடா தகற்றுங் குருமணியே. (19)

எல்லா மாகி யவ்லவுமா
　　யிருந்து விளங்கு மெம்மிறையே
பொல்லேன் றனுவாஞ் சுமைசுமந்து
　　பொறுப்ப தரிது மிகவரிது
கல்லா மனிதர் சம்பந்தங்
　　கடந்தே யுன்னை யடைவதென்றோ
நல்லோ ரன்றி யுயிர்க்குறுதி
　　நாடி லிலையென் றின்றறிந்தேன். (20)

பஞ்ச கோசங் கடந்துசிவ
　　பார மேறி யனுதினமுந்
அஞ்ச வில்லாப் பரமசுகந்
　　தோய்ந்தே யிருக்கும் வாணுளை
யெஞ்ச லில்லாப் பெரியோர்க
　　ளென்று மடைந்தா ரவரன்றி
நஞ்சை யமுதா வருந்தியிடு
　　நானுங் கரையே றுவதென்றோ. (21)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

துஷ்டர்களை நிக்கிரகம் பண்ண வேண்டித்
　　தூயோர்கட் கனுக்கிரகஞ் செய்ய வேண்டி
யிஷ்டமுட னேதசாவ தார மாக
　　வேடுத்ததுமுன் னிங்காளி லடியேன் றன்னைச்

சிஷ்டனெனும் படியர்க்க நினைத்த போதே
செலமாலங் கட்டியதாய்த் திரண்டதேபோ
லிஷ்டமுடன் பதினொன்று மவதா ரத்தை
யெடுத்துமெனை யாண்டவா றென்னே யென்னே.

உண்டான கருவியெனு மாறு றுக்கு
முன்னரிதா மதுநீயென் றுரைத்தோன் றன்னை
விண்டாலு மவன்கருணை விளம்ப வொண்ணு
விண்டுவெனு மருளுருவா விளங்கி வந்து
கொண்டானே குரம்பைமுதன் மூன்றை யுந்தாங்
குவலயத்தி லெனதுதொழி லொன்றுங் காணேன்
பண்டான பழவினைக ளெல்லாஞ் சென்றே
பரமபத மெனக்குவரும் படியா யிற்றே. (23)

அற்பமா மதுவருந்து மவனே குற்ற
மகுற்றமென வறியாது பிதற்றி னக்காற்
பொற்புமிகு முனதுபத்தி ரசம் புசிக்கும்
புன்மையனுக் கெதுநன்மை தீமை யாகும்
மற்புயனே யவ்வெறியிற் பிதற்றும் பாடல்
வகையேது தொகையேது வழியே தாகுஞ்
சொற்பிழைகள் வந்தாலும் பொறுப்ப துன்றன்
சுதந்தரமே சுதன்வசனந் தந்தை போல. (24)

இப்பாரி லுடலெடுத்தே யிந்நாண் மட்டு
மிவ்வுடலே சத்தியமா வெண்ணி நைந்தே
பொய்ப்பால னெஞ்சமெனும் வன்பே யோடும்
புகலிடமொன் றில்லாமற் புலம்பு நாளிற்
கைப்பாலன் றனக்கன்னை கருணை போலக்
கடாட்சிப்பா யெனத்துணிந்து கருதிப் பின்னு
மொப்பாரு மில்லாத வுன்னைக் கிட்டி
யுடலாதி பந்தமெலா மொழிய வந்தேன். (25)

அன்னையுத ரத்திடையே யழுந்துந் துன்ப
மதுநீங்கிப் பிறக்கும்போ தழுத்துந் துன்பம்
பின்னுமுடற் பிணியதனால் வருந்துந் துன்பம்
பேதமதி யதனாலே பிறக்குந் துன்ப
மின்னவுட லிறக்கும்போ தழுந்துந் துன்ப
மித்தனையு நீங்கவெனக் கென்னோ வென்னோ
வென்னையுமோர் ஞானவடி வாக்கு வித்த
விறைவனடி நீடூழி வாழ்க வென்றே. (26)



அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆகந் தானா வழுந்தவெனை
யழுத்த வுரித்தா மடமையினாற்
பாகன் கரத்தி லகப்பட்டுப்
பதைத்த * விபம்போற் பதைப்பேனை
மோகந் தீர்ந்த $ வுகந்தானு
முதிர்ந்த கருணை யாலழைத்து
வேக வறிவுன் னுருவென்றே
யிசைத்தா னவனை வணங்கிடுவாம். (27)

எழுசீரடியாசிரிய விருத்தம்

தடமுயர் கடல்சூழ் பொருள்வைநன் னகரந்
தனின்மனுத் தேகமாய் விளங்கித்
திடமுடன் சுருதி சாஸ்த்ரவே தாந்தஞ்
சிந்தையி லநுபவந் தெளிந்து
படிதனிற் றனைவந் தடுத்தவர்க் கிரங்கிப்
பரமசற் குருவதா யுணர்த்தி
யடியவ ரடிகட் கேயுகந் தாட்சி
யரன்பதி கயிலைவாழ்ந் தனனே. (28)

* இபம்—யானை.

$ உகந்தான்—உகந்தலிங்க தேசிகர்.

பதினான்குசீர்ச்சந்தவிருத்தம்.

ஆக நற்கனக மேனி பெற்றுடைய
    ராவி சுற்றுமொரு பாவிக
ளால மொத்தவிழி மேரு வொத்ததன
    மாசை யொத்தவிலை கூறுவார்
மூக விர்த்திகொடு மூட ரத்நமெனு
    மூட னானவனை வெல்லுவார்
மோக மற்றவுனை நினையு மன்பரையு
    மூழ்கு மாறுசெய வல்லரோ
வேக போகசுக ரூப னானவுனை
    யானு நம்பினவ னாதலா
லின்ன மங்கையர்கண் மையல் கொண்டுழல்வ
    தென்ன பாவமிது வென்னவோ
வேக முற்றுவரு கோப னேவுகணை
    வெட்டி யட்டதொரு வீரனே
வேத வாகம புராண ரூபமெனும்
    வீர பத்திர சுவாமியே. (29)

மான முற்றுவரு தார மக்கண்மனை
    மாடு நித்தமென வெண்ணியே
மாளு சித்தமுறை தீன முற்றமட
    மாய்வ தெப்பக லறிந்திலே
னானு மற்றெனது மற்ற லோடறமு
    நவிலு பாவமது மற்றுமே
னாட லுற்றறிவு மீனமுற்றவறி
    யாமை யும்மறுவ தெந்தநா
ளூன முற்றவுடல் பற்று துக்கசுக
    மொருவி யின்பமய மாகியே

யுள்ள மென்னுமொரு கவலை யின்றியொளிர்
யோகியே கொடிய பாவியாம்
வேனின் மாரன்மிக வீசு பாணமதை
வெட்டி யட்டதொரு வீரனே
வேத வாகம புராண ரூபமெனும்
வீர பத்திர சுவாமியே. (30)

நேரிசை வெண்பா.

அஞ்சும்போ யாறும்போ யைம்பத்தோ ரக்கரம்போய்
விஞ்சுவெறும் பாழாகி விட்டேனே—நெஞ்சே
யகந்தா னிருக்கு மகறிமிரம் போக்கு
முகந்தானு வேறென் றுணர். (31)

---

ஆதியிற்
பஞ்சாக்கரம் அருள்செய்த
## குருவணக்கம்
பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அஞ்சக் கரந்தன்னை யெஞ்சாது சிந்திக்கு
மவர்கட்கொ ரல்லலில்லை
யயனும் படைக்கநினை யான்மறலி கிட்டுகில
னடையவேண் டுவதுமில்லை
விஞ்சத் தனம்பூமி மைந்தரொடு சுற்றமகல்
வீடுதுணை யென்னவேண்டார்
வீணன வாருறு மெண்ணூர்கள் சொன்னாலு
மேலென்று சித்தம்வையார்
மிஞ்சுற்ற விந்தவுப தேசந் தனைப்பெற்றோர்
வெகுகாலம் வாழ்ந்திருப்பர்

மெய்யனே துய்யனே யையனே யப்பனே
வேதாந்த மோனகுருவே
மஞ்சுபதி ககனமென நிறையுஞ் சிதாகாச
வடிவமே யெமதுகுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (1)

நீங்காத வஞ்ஞான * திமிரங் கழன்ருேட
நிகழ்கின் ற பஞ்சாக்கர
நிலையான கிரணங் தரித்துவந் துதவலா
னின்மலக் § கனலியெனலாங்
தேங்காத தெளிவுதரு நால்வேத வாறங்க
திரளுங் தெரிந்தவதனுற்
சித்துருவ சீதரன் னுயிர்கட் கிரங்கிவரு
சின்மய வியாசரெனலாம்
போங்காலம் வருகால நிகழ்கால மூன்றையும்
புந்தியி லுணர்ந்தவதனுற்
பொற்புடைய தற்பிரம சிற்சொருப வானந்த
பொருவரிய சுகமுனிவனும்
வாங்காத வாங்கார தந்திக்கோ † ரரியாகி
வந்தருளு ஞானகுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (2)

அண்டங் கடந்துநிறை யீசனே பரதத்துவ
மாகுமென் றுறுதியுளதா
லற்பபல சமயங்க ணேதிசெய் தொருவனுள
னுமென்னும் லோககுருவாம்

* திமிரம் – இருள்.
§ கனலி – சூரியன், † அரி - சிங்கம்.

வண்டமிழ் தெரிந்துபல பாமாலை யர்த்தங்கள்
வல்லையி னறிந்துகொளலான்
மந்தமா ருதமூல || கிரியினி லுவந்தருளு
மாசில்குறு முனிவனுகும்
பண்டுவரு காயத்ரி யல்லுபக னீங்காது
பகர்தலாற் பனவர்பதியாம்
பாழான மாயைதரு மியானென றவிர்ந்தசிவ
பத்தியுள சித்துருவமே
வண்டுமது வுண்டுறையு முண்டகத் தெரியல்புனை
மாதவா போதவுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (3)

தாரார்க ளோர்கணந் தருகடிகை தள்வார்கள்
சந்ததமும் வந்தபிணியைச்
சலியாது வாங்கியநு பவியார்க ளென்றனுயிர்
தனுவிட் டகன்றபொழுது
வரார்க டுணையாக நீராள மாயுருகி
வந்திடுவர் போலவழுவர்
வந்தாலு நடையற்ற பிணமோடு கூடியே
மயானவரை வந்ததாலோ
தாராள மாகநா னவர்களுற வென்பதுஞ்
சதாகால மென்னையவர்கள்
சார்வாக வெண்ணினது மிப்படி முடிந்ததாற்
சரணமுனை யன்றியுளதோ
வாராதும் வாராது வருவதுவும் வந்ததெனு
மதிதந் தளிப்பதென்றோ

|| இங்கே கிரியென்பது பொதியமலையை.

வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (4)

சுத்தலட் சியமான சத்தாகி யேகமாய்ச்
சொல்லரிய சின்மயத்திற்
ருேன்றுநின் மலசத்தி சகசிவ பரமதாய்த்
தோன்றுமதி ஞனவிதப்
பெத்தமுறு பாவனையி லிற்றைவரை வீணய்ப்
பிறந்திறந் தெய்த்துவிட்டேன்
பெறலரிய வுன்கருணை பெற்றுநா னுவிதப்
பிராந்தியது தீர்வதென்ருே
புத்தமே முத்தமே சத்தியமே யானந்த
போதமே பொன்னுலகுநேர்
புகழுந் திருப்புனவை வாசனே யடியர்துதி
பொன்ருத பரமகுருவே
மத்தனே னெனதுமதி நின்பாத வனசத்தில்
வைத்திடுவ தெந்தநாளோ
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (5)

ஓயாத வேழ்கடலு மீராறு சூரியரு
மொருசண்ட வாய்வுமொருகா
லுலகத்தில் வந்துறினு மணுவுங் கலங்காத
வுறுதியுள மேருவெனலாம்
மாயாது வளர்கின்ற சிட்டர்க ளிரந்தர
மதிக்கரிய கெம்பீரமா
மனதுற்று நிற்றலா லெப்போது நிறைகின்ற
வாரியென லாகுமாதோ
காயாத சீதமுடன் வெம்மைய திரண்டையுங்
கணியா திருந்தவதனுற்

கனவடிவு பெற்றுள்ள முண்டகக் கண்ணனிரு
　　கனமான பாரியெனலாம்
மாயாத செல்வமதை யென்றனக் கருள்புரிய
　　வந்தருளு மோனகுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
　　மாருது பொழியுமுகிலே. (6)

அல்லலா னதுவிலாக் குபேரன் றனத்திலும்
　　மதிகநிதி நீங்குபொழுது
மாகாத பொய்யுரைகள் சொல்லா திருத்தலா
　　லயோத்திநக ரதிபனெனலாந்
தொல்லைவினை ரூபமாய் வருபஞ்ச கோசநகர்
　　தூளாய்த் தகர்த்தவதனுற்
சொல்லரிய ஞானமத யானையென் றியாவருந்
　　துதித்துப் புகழ்ந்துசொலலாம்
நல்லசிசு பொல்லாத சேயென்று தாயுமிரு
　　நாட்டந் தவிர்ந்தருள்வபோ
ணுடுமுல குயிரைநீ சமமா யளித்தலா
　　னன்மையுறு மன்னையெனலாம்
வல்லையென துடலாவி நிதினா னளித்திலேன்
　　வலியவேற் றுண்டகுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
　　மாருது பொழியுமுகிலே. (7)

ஆசைப் பெரும்*புணரி காமக் களஞ்சிய
　　மாங்கார பீடநீங்கா
வஞ்ஞான வாலயம் பொய்யினுக் கோர்புற்
　　றகந்தைக்கொர் சூழலாகுங்
காசுற்ற கோபாக் கினிக்கினிய காட்டமாங்
　　கடுலோபன் வாழுமனையாங்

---

* புணரி—கடல்.

கருதின்மிகு மிழிவுடைய மற்சரன் முதற்பெயர்கள்
காதலோ டுறையுநகராம்
பேசுற்ற விவ்வகைக் கிடமா யிருந்துநான்
பெற்றபே ரின்னம்வேண்டாம்
பேசரிய முத்திக்கு வித்தாகு முன்கருணை
பெற்றுப் பிழைப்பதென்றோ
வாசமுறு ‖ முண்டகத் துறைபவன் பொல்லாத
மறலியிடம் விட்டிடாதே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாரு து பொழியுமுகிலே. (8)

சின்மய விலாசராம் பரமபதி நாதரைச்
சிந்தித் திருக்குமுறையாற்
சித்தமுத லாறிந்தி யங்களு மடக்கலாற்
றிருவாத வூரரெனலாம்
பொன்மயம தானவுரு மின்னுர்சள் சாலமது
பொன்றத் தொலைத்தவதனுற்
புகழுடைய " கங்கையின் சுதனுகு மசிசமும்
புகழுவரு சேனுபதி
யென்பெயர் தரித்தலா னிருண்மல மறுத்தலா
லிருசூர னுதியசுர
ரெட்டுணையு மிச்சமற வெட்டுமொரு வேலுடைய
வெழிலான கந்தனெனலாம்
வன்பணிகள் புரிபவர்க ளாரூறு முள்ளதால்
வருமுருக னுகுமையா

‖ முண்டகத்துறைபவன்–பிரமன்; மறலி–ஏமன்; (முறையே உற்பத்தி நாசங்களைச் செய்யும் இவ்விருவரிடமும் விட்டிடாதே என்றதால், பிறப்பிறப்பின்றிய மோட்சம் தரவேண்டுமென்பது கருத்து)

" இங்கே கங்கையின் சுதன் என்றது பிஷ்மாச்சாரியரை; முருகக்கடவுளை யன்று

வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருது பொழியுமுகிலே. (9)

பந்தமுறு தொந்தவினை சிந்தனையி லெண்ணுத
பரமபத மானகதியைப்
பகர்கின்ற வுயிர்கணித மடையவருள் புரிதலாற்
பார்வதி சமேதரெனலா
மிந்தவுயிர் மிடியகல வந்தகுரு சுவாமியுன்
னிருபாத நிதியருளலா
லிருவான வரசுபுகழ் வரமான பதமுதவு
மெழிலார ணத்தனெனலாந்
தந்தம்வினை வழிநின்று துன்பமுறு மெம்மனோர்
சனியாத வமுதமயிலச்
சந்தத முவந்துதவு கின்றதா லிர்ங்கிரண
சந்திர னெனப்புகலலாம்
வந்துபிற வாதவகை யடியனுக் கருள்புரியும்
வள்ளலே பரமகுருவே
வணிகர்குல வோஷதிக டழையவுப தேசமழை
மாருதுபொழியுமுகிலே. (10)

---

## முத்தி நிச்சயம்

### நேரிசை வெண்பா.

அறிவா னறிபொருளோ டாமுணர்வும் பொன்றிக்
குறியா வையுமறந்து குன்றிற்—பிறியாது
நித்தம் பரசுகமாய் நிற்பதுவே முத்தியதற்
கர்த்தமிது சொன்னே னறி. (1)

நித்திரையுஞ் சாக்கிரமு நீண்மறப்*பெண் ணத்தாலா
மத்தனையுந் தோன்று தகத்தடக்கிச்—சித்திரம்போ

---

* எண்ணம் - நினைப்பு.

லென்றிருப்ப தன்றுமுத்தி யெய்துமிது வேசுகமா
நன்றிதுவே யர்த்தமென நாடு. (2)

காண்பானுங் காண்பவையைக் காணுமிடத் தேகமதாய்ப்
பூண்பனவால் வாதனையும் பூண்டிடுமே—வீண்பயிலும்
வாசனையைச் சித்தத்தில் வையா ததுமுத்தி
யாசிலிதற் கர்த்தமிதே யாம். (3)

உட்புறம்பா லியானெனதென் றுற்று வருமவற்றை
நட்புற்று நாடோறு நைந்துநைந்தே - யெய்ப்புற்றுப்
போகாம லெப்பொழுதும் பூரணமா மன்னமுத்தி
யாகாதோ வர்த்தமிதே யாம். (4)

உள்ளசுக மீதென் றுணரவறி யாதமனக்
கள்ளனு லிவ்விடயா காங்கிசையு - மெள்ளமெள்ள
வந்ததே யிவ்விடய வாஞ்சை யிறக்கமுத்தி
சிந்தையிதே யர்த்தமெனச் சேர். (5)

---

## தெய்வ நிச்சயம்

நேரிசை வெண்பா.

சுட்டுமிடத் துண்டெனலாய்ச் சுட்டற்று லில்லாத
துட்டமனச் சஞ்சலத்திற் றேயாம - லெட்டரிதா
யெவ்வுருவு மெங்கு மிரும்பொருளாய் நின்றதெதோ
வவ்வறிவே தெய்வமென லாம். (1)

காண்பனவா லுண்டெனலாய்க் காண்பதற்றுலில்லாத
வீண்பயிலு மாயைவிதி ரித்தமதாய் - மாண்புடைய
முப்பாழ் கடந்த முதற்பாழா மூலமெதோ
வப்பொருளே தெய்வமென லாம். (2)

---

## மனத்திற் கறிவுறுத்தல்

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நன்றுகளுந் தீதுகளு நமதிடத்தி லில்லை
　　நமதிடத்தி லுண்டான நினைவதனு லுண்டு
நன்றுகளுந் தீதுகளு நினைவிறந்தா லில்லை
　　நமதுமயம் வெறும்பாழா நாடியது வாவாய்
நன்றுகளுந் தீதுகளு நினைவுமய மாகு
　　நமதுமய நினைவாகு நாடியுண ருங்கால்
நன்றுகளுந் தீதுகளு மின்றிநிறை கின்ற
　　நமதுமய மெல்லாமா நாடியது வாவாய். (1)

கலிவிருத்தம்.

அம்மாவிக மிதுவேபர மிதுவென்றன வரதந்
தம்மான்மிக நொந்தேயுமி குத்திச்சலி யாதே
கைம்மாறறு முடலைத்தினங் காக்கக்கரை யாதே
சும்மாவிரு சுகமேவருந் தொடர்ந்தாயிலை மனனே. (2)

நேரிசை வெண்பா.

வேண்டாதே கண்டவெல்லாம் வேண்டினுற் பந்தமுனைத்
தீண்டாதோ சென்மவினை தீர்ந்திடுமோ-மாண்டாலுந்
தீரா வியாதியுனைச் சிக்கியா ளாக்கிவிடும்
பாராய் தவிரும் படி. (3)

அச்செல்லாம் பொய்யென் றறிந்தா லதிலொருவன்
றுச்சமற நன்மையறச் சொன்னுலும் - அச்சொல்லும்
பொய்யோ வதுமெய்யோ போதமில்லா நெஞ்சமே
யையோ விதினுேவா ரார். (4)

அத்தியந்தா பாவ மாகுமிழி கோசமைந்தும்
புத்தியினு னித்தியமாய்ப் பொற்புறல்போற் - புத்தியினு
லில்லாதாய் நீங்காதோ வேழைமன மேயிதனிற்
புல்லா திருந்தவனுே பொய். (5)

---

## பொதுவாகக் கூறியது

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விண்ணாதி பூதமெலாஞ் சிவமே யாகும்
மெய்யுருவும் பொய்யுருவுஞ் சிவமே யாகுங்
கண்ணான வேதமெலாஞ் சிவமே யாகுங்
கருதுகின்ற நினைவெல்லாஞ் சிவமே யாகும்
எண்ணிறந்த பேதமெலாஞ் சிவமே யாகும்
இப்படியே தினந்தோறுங் காண்பா னாகிற்
பெண்ணாணு மலியாகும் பேத மின்றிப்
பிரமமய மாதறிண்ணம் பேத மின்றே. (1)

அகவிருத்தி தனிலுண்டாஞ் சீவ னுக்கே
யதிட்டான ஞானவடி வல்ல வென்று
லகவிருத்தி தானிதமா வாகும் போதே
யவனெனதென் றியாதொன்றையறியவொண்ணு
வகவிருத்தி செனித்தவிட மகண்ட மாகு
மல்லவெனி லவைசெனித்த வடிவ மாகா
வகவிருத்தி செனித்தவடி வாத லாலே
யதிட்டானந் தனிலடங்கு மைய மின்றே. (2)

நேரிசை வெண்பா.

சீறும் புயங்கஞ் சினமிகுத்த தென்றறிந்து
பாறுறு மெய்யோர் பயமான - வாறதுபோ
லாங்கார வீண ரருகே யறிவுடையோர்
தாங்காமற் சொல்லார் தகும். (3)

எண்ணிப் பலபொருளை யீட்டினே னானாலும்
மண்ணிற் பெரியோனாய் வாழ்ந்தாலும்- †விண்ணதிலே
$ மூடா விழியுடையோ ராலு முத்தியினைக்
கூடார்கட் காளாக் குறி. (4)

---

† விண் – தேவலோகம்.

$ மூடா விழியுடையோர் – தேவர்கள்.

சாதிக் கிழுக்கென்றுந் தன்குலத்துக் கீனமென்றும்
பேதிக்கு மூடனே பேசக்கே - ளாதிக்கே
யில்லாத சாதிக் கிருப்பிடமீ தென்றுரைத்தா
னல்லா ரதைநாடு வார். (5)

தன்மய மாஞ்சத்தி தானினைக்க நாமவுரு
மின்மயம்போற் றோன்றி விளிந்திடுமே - யென்மயமே
யாமே யவையெல்லா மானல்யா னும்மெனதும்
போமே சிவமயமாய்ப் போம். (6)

ஆதினடு வந்தத் தழியா திருந்ததெந்தச்
சோதியன்றோ வைந்தாந் தொழில்செய்யுந் - தீதிலவை
யேரா ரெனதுமய மென்றறிந்தா லெத்தொழிலு
மாரார் சிவமயமே யாம். (7)

தீதுநலம் பாவமறஞ் சேதனமாஞ் சின்மயமே
சேதமற நின்று தினம்புரியு—மாதலினு
லிவ்வுருவ மென்மயமே யென்றுணரி லிந்நான்கு
மவ்வுருவ மாஞ்சிவமே யாம். (8)

கும்பிடவோ மேலில்லை கும்பிடவோ கீழில்லை
கும்பிட்டு நீங்கக் குறையில்லை—கும்பிடும்பே
ராரோ வறியேன்யா னுகாகா வோகோகோ
சீரேது மில்லை சிவம். (9)

செய்யுந் தவமுந் திரயோக நிட்டைகளுஞ்
செய்யு முபதேசந் திரபூசை—யையமறச்
சொல்வேன் சுதந்தரனே யன்றி யுலகென்ப
தில்லென் றுணரு மிதே. (10)

தெய்வ வடிவறிந்தத் தேவதையைப் பூசைபண்ணித்
தெய்வ வடிவாந் திறங்கேளீ—ரையமினுல்
சற்குருவாற் றுனுணர்தல் சந்ததமுஞ் சிந்தித்த
னிற்குமது வான நிலை. (11)

ஐஞ்ஞூற்று வீச ரடியிணையைச் சேர்ந்தவுனக்
கெஞ்ஞான்று நெஞ்சே யிடருண்டோ—*பைஞ்ஞாகந்
தாங்கும் புவிவிளங்கச் சஞ்சரிக்கும் பானுகண்ட
தூங்கிமம் போகாதோ சொல். (12)

ஈயக் கதிரா மிலக்கணமு மின்குறளு
மாயப் பொருளா வறைந்தாலு—நோயகலா
துன்னை மறந்த வொருதுரிய பூமியிலே
மன்னி யிருக்க மதி. (13)

---

## புத்திக்கறிவுறுத்தற் கண்ணி

வெண்செந்துறை.

பஞ்ச விதவிடயம் பாங்காய்ப் பரம்புசிக்க
நெஞ்சேநீ நானெனவே நிச்சயிப்ப தென்னமதி. (1)

அஞ்சு விதவிடய மாருமறி வாயிருக்கப்
பஞ்சவித மாகப் பார்த்துழல்வ தென்னமதி. (2)

காண்பவனைக் காணாது காண்புவையைக் கண்டுமன்று
வீண்கால மாக விழற்கிறைப்ப தென்னமதி. (3)

ஈசன் வடிவாமே $ யெட்டுருவு மென்றுணர்ந்து
பாசந் தவிர்ந்தொழியப் பாராத தென்னமதி. (4)

---

*பைஞ்ஞாகம்-பைந்நாகம்; படத்தையுடைய(ஆதிசேடனாகிய) நாகம். "ஐகான்யவ்வழி" என்னும் நன்னூற் சூத்திர விதிப்படி வந்த இடைப்போலி. "செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்" என்னுந் திருத்தாண்டகத் திற்போல.

$ எட்டுரு-நிலம் நீர் தீ காற்று ஆகாயம் சூரியன் சந்திரன் இயமானன் என்பவைகள். மோகவதைப் பரணியில் :- "மதிபரிதி யெரிநீர்கால் வானவனி யியமானன் வடிவாய்" என்றும், திருவிளையாடலில் "இயமான னிந்திரவி யெரிவானிலஞ்சலில மெறிகா லெனும்பகுதி யிருநான் மயமான சுந்தரனை" என்றும், திருஞானசம்பந்தர் தேவாரத்தில் "எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே" என்றும் வருவன வெல்லாங் காண்க.

காரியரூ பங்களெல்லாங் காரணமாக் காணுமல்
நாரிமனை யென்னதென நாடவந்த தென்னமதி. (5)

சும்மா தனியிருக்குந் தூயதாந் துரியமதில்
*அம்மா தினமிருப்ப தாகாத தென்னமதி. (6)

எவ்வுருவு நாடி னிராக வெகுளியறத்
தவ்வ லறச்சிவமாய்ச் சார்ந்தறியா தென்னமதி. (7)

நானெனவு நீயெனவு நாடலுட லைக்குறித்தே
ஞானமய மொன்றெனவே நாடாத தென்னமதி. (8)

பொய்யைப்பொருளாகப்புன்மதியாற்கண்டதுபோன்
மெய்யையுணர்ந் தத்துவிதம் வேண்டாத தென்னமதி.

எப்பொழுதுந்தன்னையன்றி யாதுவந்த தியாதொழிந்த
தப்படியே யெண்ணி யமையாத தென்னமதி. (10)

மாயா விருளிரவில் வந்தகனு விட்டொழிந்து
நீயா நிலைதனிலே நில்லாத தென்னமதி. (11)

முன்னடங்கும் வாதனைகண் முற்றுந் தவிராமே
யின்னமினந் தாங்கி யிரங்குவது மென்னமதி. (12)

ஆகாத வாதனையா லல்லறினம் பட்டுழன்று
மோகோ வினந்தவிரா துழலுமதி யென்னமதி (13)

பேதமுறு புந்திதனைப் பேதித் தகற்றும
லாகமயல் கொண்டதுவா யாகுமதி யென்னமதி. (14)

பொல்லாக் கயவர் புகும்வழியிற் செல்லாம
னல்லோ ரடங்குமிட நாடாத தென்னமதி. (15)

கற்பிதத்தை மெய்யாகக் கண்டுகண்டு துன்பமுரு
தற்புதமாஞ் சின்மயனீ யாகாத தென்னமதி. (16)

சுட்டற்ற வெட்டவெளி தோயாம னுமவுருச்
சுட்டி யனுதினமுந் துன்பமுற லென்னமதி. (17)

நிற்க நிறுத்த நிலையாத நீசமனத்
துற்சங்க நீக்கிச் சுகமாகா தென்னமதி. (18)

---

* அம்மா-வியப்பிடைச்சொல்

தட்டத் தடுக்கத் தடைபடா நீசமனத்
துட்டப் பிசாசோடுந் தோயுமதி யென்னமதி. (19)

கட்டப் பிடிக்கக் கடந்தோடு மீனமனச்
சுட்டகற்றித் தற்பதத்தைத் தோயாத தென்னமதி. ()

நிர்க்குணனே முக்கணனுய் நின்றுசகங் காட்டியட்டு
நிர்க்குணனுய் நிற்பதென நில்லாத தென்னமதி. (21)

சந்ததமுஞ் சின்மயமாய்த் தானிருந்தாற் றெருந்தவினை
வந்துறுமோ வென்று மதியாத தென்னமதி. (22)

கண்டவெல்லாம்பொய்யாகக் கண்டிருந்துங்காண்பவையை
யுண்டெனவே பற்றி யுழலுமதி யென்னமதி. (23)

## நெஞ்சோடிரங்கல்

### பாயிரம்

நேரிசை வெண்பா.

மேலாந் துரியநிலம் விட்டுவிட யத்துமூன்று
நாலா விதவரந்தை நண்ணிநண்ணி-மாலாகி
நின்றமனத் தோடிரங்கு நீதி தனையிதயந்
துன்றியுறை யைங்கரனே சொல். (1)

$ மஞ்சூரு மஞ்சன் மகன்றனுவி னூறுற்ற
நஞ்சாருங் கண்டத்து § நக்கனிட - மெஞ்சாது
புல்லி யிருந்தருளும் † பூரணிநெஞ் சோடிரங்கல்
சொல்லுமென்ற னுவிருந்து சொல். (2)

வெண்செந்துறை.

சீரார் கழனித் திருநெல்லை யம்மைபதஞ்
சாராம லென்னே சனித்திறந்தாய் நெஞ்சகமே. (1)

---

$ மஞ்சூரு மஞ்சன் மகன் - மேகவாகனனுகிய (மேகம் போலும் நீலநிறமுடைய) இந்திரன் மகனுய அர்ச்சுனன்.

§ நக்கன் - ஈஸ்வரன் (கொற்றவாளிறைவர்)

† பூரணி - ஈஸ்வரி (திருநெல்லையம்மை); அண்மைவிளி.

இதுவே சிவமென்று மீது மனமென்று
மதனுல் விளங்கிலுனக் கறிவெங்கே நெஞ்சகமே. (2)

பன்னுளுங்காண் பவற்றை றப்பற்றிநொந்துநைந்திருப்ப
தெந்நா டொலேத் ‡ தறிவா யென்றிருப்பாய் நெஞ்சகமே.

எந்நாளு மின்பநிலை யீதென் றறிந்திருந்தும்
பன்னுளுந் துன்பப் படலாமோ நெஞ்சகமே. (4)

அச்சந் தவிர்ந்தநிலை யாமதனைச் சேராமற்
றுச்ச விணைபுரியத் துணிந்தனையே நெஞ்சகமே. (5)

தன்மயமீ தென்றுணர்ந்துந் தானதுவாய் நில்லாம
லின்ன மிடரடைவ தென்னமதி நெஞ்சகமே. (6)

ஈதென தியானிவனென்றெண்ணியெண்ணி§யேழையர்போற்
றீதடைந்தாற் சிதளமுஞ் சேருமதோ நெஞ்சகமே. (7)

பாச வடவிதனைப் பற்றிப் பயமடைந்தான்
மாசுதவிர்ந்தவெளி மன்னலுண்டோ நெஞ்சகமே. (8)

வாசனைக ளியாதுமிலா மன்னுதுரி யந்தனிலே
தேசுபெற நிற்கத் திகைப்பேனே நெஞ்சகமே. (9)

சங்கற்ப சாலந் தவிர்ந்தசம பாவனையிற்
றங்கிப் பரமசுகஞ் சார்வதென்ருே நெஞ்சகமே. (10)

பாராமற் பார்க்கும் பரமவிழி பெற்றிருந்தா
லூரேது பேரே துலகேது நெஞ்சகமே. (11)

இந்தப் பெரும்பிரமா காரநிலை யெய்தாமற்
றெருந்தப் பிராந்திநிதந் தோய்ந்தனையேநெஞ்சகமே ()

மோகாதி காரியங்கண் முற்று மிறந்தபதத்
தோகோகோ சேரா துழல்கின்ருய் நெஞ்சகமே. (13)

ஐம்பொறியு மைம்புலனு மாறி யடங்குமிடம்
நம்பிநம்பி நீயடையு நாளென்ருே நெஞ்சகமே. (14)

---

‡ அறிவாயென்றிருப்பாய்- ஞானருபமாகவே யெக்கால மிருப்பாயோ.

§ இங்கே யேழையர் என்றது விவேகசூனியரை; வறுமை யாளரை யன்று.

பற்றுமற் பற்றும் பரமசுக நிட்டைதனைப்
பெற்றிருந்தா லென்னகுறை பேசாய்நீ நெஞ்சகமே.

ஆன்ம வுருவகண்ட மந்தவுரு வாகாமற்
றுனொருவன் போலாய்ச் சலித்தனையே நெஞ்சகமே.

சச்சிதா னந்தத் தனிவீட்டின் வாழாமல்
நச்சுருவாங்காட்சிதனை நாடினைந்தாய்நெஞ்சகமே.

சான்றுந் துரியமதைச் சாராம னுடோறுந்
தோன்று விடயமதைச் சுட்டினையே நெஞ்சகமே. ()

பாவனைக ளியாதுமிலாப் பானநிலை யெய்தாமற்
றீவினையைச் சேர்வதென்ன சிந்தனையோ நெஞ்சகமே

தூங்காமற் றூங்குஞ் சுகநிலையிற் செல்லாது
நீங்காமற் றுச்சவினை நீபுரிந்தாய் நெஞ்சகமே. (20)

காண்பவற்றை முப்பொழுதுங் காட்சியறத்தோற்றுவிக்கு
மாண்புடைய சித்தின் மடிவதென்றோ நெஞ்சகமே.()

|| நித்தரங்க முந்நீர்போ னின்று விளக்கறிவின்
வைத்த படிரமித்து வாழ்வதென்றோ நெஞ்சகமே. ()

* திறிபுடிக்குஞ் சாட்சியெனுஞ்சின்மயமாய்நில்லாமற்
குறிபிடித்து நாடோறுங் குலைகுலைந்தாய் நெஞ்சகமே

அவத்தாத் திரய வதிட்டான மாயிருந்து
பவத்தை யழிக்காமற் பாழ்பட்டாய் நெஞ்சகமே(24)

முக்குணமுங் கெட்ட முதற்பாழைச் சாராம
லக்குணத்தோ டொன்றி யலைந்தனையே நெஞ்சகமே.

கோசமைந்துந் தோன்றுக் குருதுரியஞ் சேராமற்
பாச மெனும்வலைக்குட் பட்டுழன்றாய் நெஞ்சகமே.

எல்லா மிறந்தநிலை யீதென்று கண்டிருந்து
நில்லாம லந்தநிலை நீங்கினையே நெஞ்சகமே. (27)

---

|| நித்தரங்க முந்நீர் - அலையில்லாக்கடல்

* திரிபுடி என்றது எதுகைநோக்கித் திறிபுடி என மருவிற்று.

§ ஆருறின் மேலா மறிவுமய மாகாம
$ஓரா றினேடி யுழல்வதென்னே நெஞ்சகமே. (28)

துன்பத் துவிதந் தொலைந்தசுக நிட்டையிலே
யின்பத் துருவா யிருப்பதென்றே நெஞ்சகமே. (29)

சிவே சுரசெகத்தைச் சித்தொன்றுத் தோற்றுவிக்கப்
பாவனையாற் பேதித்துப் பற்றுகின்றாய் நெஞ்சகமே.

ஆமை யுறுப்பை யடக்குதல்போற் காண்பவையாந்
தீமை தனிற்புலனைச் சேர்க்காதே நெஞ்சகமே. (31)

சத்தோ டசத்துஞ் சதசத்து மாகாத
சித்தம் பலவாஞ் செகம்பொருளோ நெஞ்சகமே. (32)

சித்துருவாற் றேன்றுஞ் செகந்தனையீ தின்னதென்று
நித்தமவ தானஞ்செய் நீயொழியாய் நெஞ்சகமே. (33)

எத்தனையோ கோடி யியல்புரைத்துங் கேளாம
லத்தனையும் பாழா வயர்த்தனையே நெஞ்சகமே. (34)

எட்டுருவு மீசன்மய மென்றறிந்து மந்தமதி
விட்டவனைப் பற்றி விடுதலுற்றாய் நெஞ்சகமே. (35)

நிவாத தலதீப நிற்பதி னில்லாமற்
குவாலப் பிணிக்குரம்பை கூடினைந்தாய் நெஞ்சகமே.

சித்திரத்தி லேவரைந்த தீபம்போ லில்லாமற்
கத்தித் தலைவெடிக்கக் கற்றனையே நெஞ்சகமே. (37)

§ அரவின் களமறுக்கி லைந்தலையின் கேட்டிற்
பரமவுரு நீயடையிற் பாறுமைந்து நெஞ்சகமே. (38)

---

§ ஆருறு – தூலசரீர தத்துவங்கள் 6, சூட்சுமசரீர தத்துவங்கள் 20, காரணசரீர தத்துவம் 1, ஜீவன் 1, மாயை 1, ஈஸ்வரன் 1, பூதங்கள் 5, பிரஹ்மம் 1.

$ ஓராறு – ஞானேந்திரியங்கள் 5, மனம் 1.

§ அரவு - (இங்கே) ஐந்தலை நாகம்; களம் – கழுத்து. கேட்டில் - நாசம் (ஏற்படுதலே) போல. ஐந்தும் பாறும் – (சத்தாதிகள்) ஐந்தும் நாசமுறும்.

தத்தாய பிண்டமதிற் சார்ந்தசலம் போற்றுரிய
வத்தி லடங்கியதாய் வாழ்வதென்றே நெஞ்சகமே

எண்ணெயிருப் பற்ற வெழிற்றிபம் போலவுநீ
யெண்ணரியவிச்சைதவிர்ந் தென்றழிவாய்நெஞ்சகமே

இல்லா திறக்கு மிழிகுரம்பை வாசனையைப்
புல்லாது மெய்யுணர்வைப் புல்லலென்றே நெஞ்சகமே

சும்மா விருந்துசுகந் தோயாமற் றன்னினைவா
லம்மா சுகமடைந்தோ ராருரைப்பாய் நெஞ்சகமே.

போராட்டப் பட்ட † புரமெடுத்த விவ்வரையிற்
சீராட்டி லென்னசுகஞ் சேர்ந்தனை நீ நெஞ்சகமே. (43)

இல்லாளு மில்லத் திருநிதியு மீன்றமக
வெல்லா மறந்திருப்ப தென்றுரையாய் நெஞ்சகமே.

பந்தநமக் குண்டதனைப் § பாற்றமுத்தி வேண்டுமெனு
மிந்த நினைவிரண்டு மென்றயர்ப்பாய் நெஞ்சகமே. (45)

¶ மறப்பதுவே நல்லதென மாணவர்தாஞ் சொல்ல
வறத்தினமு நீநினைத்தே யல்லலுற்றாய் நெஞ்சகமே.

எல்லா மறந்துவிட்டா லிவ்வுடல நீங்குமெனில்
இல்லமிலாப் பித்த னிருப்பதுபோ னெஞ்சகமே. (47)

முற்றுமல மாயிருக்கு மூடமதா மிவ்வுடலிற்
சற்றும் விரத்தியுண்டாய்ச் சார்கிலையே நெஞ்சகமே.

---

† புரம் - உடம்பு. § பாற்ற - கெடுக்க.

¶ மறப்பதுவே நல்லதென மாணவர்தாஞ் சொல்ல — திரிசிய விஸ்மரணமே நன்கு செய்யத்தக்கதென மாட்சிமை தங்கிய அறிஞர்கள் கூற.

அற - மிகவும்.

* செய்ததுவே செய்யத் தினந்துணிந்து செல்வதுவே
யுய்யும் வழியென் ஞெருப்பட்டாய் நெஞ்சகமே. (49)

பத்துத் திசையும் பதினுன் குலகுமற்றுஞ்
சித்தசித்துஞ் சிற்சடமுஞ் சிவரூப நெஞ்சகமே. ()

பண்ணவிதன் பாதநிழற் பற்றியது வாயிருக்கி
லெண்ணரிய விச்சை யிரிந்தோடு நெஞ்சகமே. (51)

என்னிதயத் துள்ளே யிருந்ததிரு நெல்லைபதத்
துன்னினைவு நீயு மொழிவதென்ருே நெஞ்சகமே. ()

அண்டமெலாந் தோற்றி யழிந்தபத மாயிருந்தாற்
பிண்ட வுபாதியன்றே பேராதோ நெஞ்சகமே. (53)

எல்லா வுலகு மிறந்துமிற வாதபதஞ்
செல்லாது காண்பவற்றிற் சிக்கினையே நெஞ்சகமே.

தோன்று சிசுவுணர்வு துகளற்றுக் காணுதலின்
மான்றவுரு வந்தோன்ற வருவதென்ருே நெஞ்சகமே.

தோற்றுருவை யீதெனவே சுட்டுமய லாமறிவை
மாற்றி யகண்டசுக வாழ்வடைவாய் நெஞ்சகமே. ()

விட்டே னுலகமெனும் வீணுன வாசனையுங்
கெட்டிலங்கு மன்னையடி கிட்டுவையோ நெஞ்சகமே.

---

* இப்பாட்டில் :—

உண்டதே யுண்டு முடுத்ததே யுடுத்தும்
அடுத்தடுத் துரைத்ததே யுரைத்துங்
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டுங்
கழிந்தன கடவுள்நா ளெல்லாம்

என்ற, மகான் பட்டினத்தடிகளின் திருவெண்காட்டுத் திருவிசைப்பாக் கருத்து அடங்கியிருத்தல் காண்க.

எத்திக்குந் தாஞ யிறந்துபிற வாதடைந்தாற்
செத்துப் பிறத்தலன்றே தீராதோ நெஞ்சகமே. (58)

ஒன்றேடுந் தாக்கற் றுறுதுரியா தீதமதிற்
சென்றுசிவ மாகவெந்நாட் செல்லுமதோ நெஞ்சகமே

மெய்யுருவை நாளும் விரும்பா திருந்தவிந்தப்
பொய்யுருவாற் பட்டதுயர் போதாதோ நெஞ்சகமே.

பன்ஞளுங் காண்பவற்றைப் பற்றிப் படுந்துயர
மென்ஞ லினிச்சகிக்க வேலாதே நெஞ்சகமே. (61)

எந்நாட் சிவவடிவை யான்மறந்த தன்றுமுத
லுன்னேடுங் காண்பவற்றை யுற்றுழன்றே னெஞ்சகமே.

இற்றைவரைக் காண்பவையை யெய்தியெய்தி யென்னசுகம்
பெற்றனைசொன் ஞலறியாய் பேதமல நெஞ்சகமே.

எல்லா மிறந்ததிரு நெல்லை யிணையடியைப்
புல்ல வகமிதமும் போகாவோ நெஞ்சகமே. (64)

வித்தைச் செருக்கடைந்து வீணுட் கழிக்குமருட்
புத்திக் குருடர்நெறி போகாதே நெஞ்சகமே. (65)

நிழனெருப்பாய்க் கண்ட நினைவு தவிராதே
விழலுக்கு நீரிறைக்கும் வேலையுற்ருய் நெஞ்சகமே.

நாரி * யிலம் பூமிதன நாசமுறு மென்ற வெலாம்
வாரியினிற் பெய்த மழையான நெஞ்சகமே. (67)

ஓயா துழலுமதி யோய்வதிலை யுன்றனக்கு
வாயாற் பிதற்றமதி வந்ததென்னே நெஞ்சகமே. (68)

பொல்லாத விக்காயம் புல்லுமதி வாசனைக
ளெல்லா மிறந்தவென வென்றிருப்பாய் நெஞ்சகமே.

காரார் குழன்மடவார் கற்பித்த வேவல் செய்து
தூராக் குழிதூர்க்கத் தோன்றினையே நெஞ்சகமே. ( )

---

* இலம் - வீடு; லகரவொற்று இடைக்குறை.

விண்ணூதி கண்ட விசுவமிற வாதிருந்த
கண்ணூந் துரியமதைக் கையிகழ்ந்தாய் நெஞ்சகமே.
ஆரணங்க ளிதென் றறிவரிய தென்கழனிப்
பூரணியை நீமறந்து புண்பட்டாய் நெஞ்சகமே. (72)
அல்லும் பகலு மகமிதந்தி ரென்றதனாற்
கல்லுங் கரையாதோ கடைப்பட்ட நெஞ்சகமே. (73)
இல்லந் துறந்து சுகத்துறவை யெய்தாம
லல்லற் படுமியல்பை யார்விதித்தார் நெஞ்சகமே. (74)
பற்றுமற் பற்றும் பரமசுக நிட்டைபெற்றூற்
பற்றுருவி லென்னதெனும் பார்வையுண்டோ நெஞ்சகமே.
தோன்றுமற் றேன்றுந் துரியநிலங் கண்டிருந்தா
லூன்றுது பற்றிவிடு மோர்வுண்டே நெஞ்சகமே. (76)

---

## தெய்வமே யென்னுங் கண்ணி.

அண்டமும் பிண்டமு மானதுங் காண்கிலேன் றெய்வமே-யிந்த-வண்டமும் பிண்டமும் வேறென் றறிந்திலேன் றெய்வமே. (1)

ஆதியு மந்தமு மில்லா வரும்பொரு டெய்வமே-யிந்தக்-கோதா முடம்பாய்க் குறித்து விளங்குதே தெய்வமே. (2)

இன்ப வுருவா யிருந்த பரஞ்சுடர் தெய்வமே யிந்தத்-துன்ப சுகவினைத் தொந்த மடைந்ததே தெய்வமே. (3)

ஈகையு மேற்றலு மில்லா விரும்பொரு டெய்வமே யிந்த-வீகையு மேற்றலு மாகி யிருந்ததே தெய்வமே.

உண்மையு மின்மையு மின்றி யிருந்ததே தெய்வமே-யிந்த-வுண்மையு மின்மையு மாகி விளங் குதே தெய்வமே. (5)

ஊன முறும்பந்த வோதமொழிந்ததே தெய்வமே யிந்த-ஊனமுறும்பந்த வோத மடைந்ததே தெய்வமே.

எப்பொரு ளாவது மெய்ப்பொரு ளென்பது தெய்வமே-யிந்தத்-தப்பறு நல்லோர் நிலையிது சத்தியந் தெய்வமே. (7)

ஏதோ தறிகள்ள னென்பது போலொன்று தெய்வமே - யிந்தத்- தீதே யிலாத சிவத்தினிற் றோன்றுதே தெய்வமே. (8)

ஐய வுருவே யகமென்று தோன்றலாற் றெய்வமே யிந்தப்-பொய்யா மலகையாம் புன்பவந் தோன்றுதே தெய்வமே. (9)

ஒன்றோ படும்பா டுரைப்பேன் சிறிததிற் றெய்வமே-யிந்தப்-பொன்று முடம்பும் பொருளாய் முடிந்ததே தெய்வமே. (10)

ஓவாத ஞான வமுத முவட்டுதே தெய்வமே யிந்த - வோவும் விடய விடஞ்சுக மொத்ததே தெய்வமே. (11)

ஔவிய மில்லாவறிவு மறைந்ததே தெய்வமே யிந்த- ஔவிய ரூப வகிலமே தோன்றுதே தெய்வமே. (12)

அக்கமும் பக்கமு மானதைக் காண்கிலேன் றெய்வமே-யிந்த-வக்கமும் பக்கமு மெண்ணி யழிந் தேனுன் றெய்வமே. (13)

கண்ட வுருவங்கள் காண்பதாக் காண்கிலேன் றெய்வமே - யிதைப் - பண்டு பறித்திட்ட பாவிய ரார்கொலோ தெய்வமே. (14)

காலங்கண் மூன்றுங் கடந்ததைக் காண்கிலேன் றெய்வமே - யிந்த - ஞாலத்தின் பேதங்க ளன்ருகத் தோற்றுதே தெய்வமே. (15)

கின்ன முறும்பல வீணரைக் கிட்டினேன் றெய்வமே - யிந்த - நன்னலம் பெற்ருேரை நண்ணவு நாணினேன் றெய்வமே. (16)

கீழோ ருரைத்த வுரைகளைக் கேட்கிறேன் றெய்வமே-யிந்தப்-பாழ்வாழ்வி லென்ன பயனெனத் தேர்கிலேன் றெய்வமே. (17)

குட்டிய மான குரம்பையை நாடொறுந் தெய்வமே - மிகக் - கட்டியே காத்திருந் தென்பயன் கண்டனன் றெய்வமே. (18)

கூடாதென் ருலிந்தக் கூட்டி லிருக்கவுந் தெய்வமே - யிந்தப் - பாடு படுவது பார்த்திலை யோபர தெய்வமே. (19)

கெம்பீர மன்றிக் கிலேச மடைந்தனன் றெய்வமே - யிந்தப் - பம்பு பவக்கட ருண் டலென் ருேபர தெய்வமே. (20)

---

# கிளிப்பத்து.

வெண்செந்துறை.

* கண்படையுஞ் சாக்கிரமுங் காணாத் துரியநிலைப்
பண்படைவ தென்றோ பகராய்நீ வஞ்சுகமே. (1)

உன்னும் புறம்புமன முற்றிடுஞ்சங் கற்பசகந்
தன்னிச் சுகநிலையிற் சார்வதென்றோ வஞ்சுகமே. (2)

உன்ன லொழிதலினா லுண்டரந்தை யின்பாரிது
பன்னு சமநிலையிற் பாறலென்றோ வஞ்சுகமே. (3)

உள்ள நினைப்புமறப் புற்றிடினோர் தன்வடிவை
யுள்ள படியுணர வொண்ணுமதோ வஞ்சுகமே. (4)

இத்தரையிற் றேகமெடுத் தெய்துமனச் செய்கைவிட்டுச்
சித்தசம மாம்வாழ்வு சேர்வதென்றோ வஞ்சுகமே. (5)

---

* கண்படை—துயில் (சுழுத்தி) கேவலம். சாக்கிரம் – சகலம் (இதில் சொப்பனம் அந்தர்ப்பாவம்.) இச்செய்யுளில் மகான் சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதி முறையில் :—

பகலுட னிரவு மிடையினு முனது
 பாதப்பே ரொளியிடைப் புகுந்து
சகலகே வலத்தின் றுக்கற வடியேன்
 றகுசுகத் திருக்கு நா ளுளதோ...........என்றும்

குமாரதேவர் பதிகத்தில் :—

இரவுநன் பகலு மிலாதமத் தியத்தில்
 இருந்திடுந் துருவனைப் போல
இரண்டுதட் டகத்தும் நிறைபொருட் சமனாய்
 இருந்தநற் றராசுமுட் போலப்
புரையுறு சகல கேவல மதனிற்
 பொருந்திடா தினியசுத் தத்திற்
பொருந்தியே யகந்தை தவிர்ந்துநான் வாழப்
 பொருந்தவைத் தாண்டருள் புரிவாய்......என்றும்

திருவாய்மலர்ந்தருளியுள்ள அருமைச் செய்யுட்களின் கருத்து வந்திருத்தல் காண்க.

இட்டமொடு நாமவுரு வெய்திமனஞ் சுட்டியுறுஞ்
சுட்டறிவு நீங்குநிலை தோய்வதென்றோ வஞ்சுகமே. ()

தம்மா லறிவறியா மையிரண்டுந் தள்ளிவிட்டுச்
சும்மா விருக்குநிலை தோய்வதென்றோ வஞ்சுகமே. (7)

இத்தேகம் பற்றி யிருக்குமொரு தேகியின்றி
யெத்தேக மும்யாறு யிருப்பதென்றோ வஞ்சுகமே (8)

மூலப் பகுதி முடிந்துமுடி யாதுபெறுஞ்
சீலப் பரமசுகஞ் சேர்வதென்றோ வஞ்சுகமே. (9)

சித்த மிறந்தாற் சிவமிறக்குந் தேகியுள
தத்தன்மையின்றியவ னுவதென்றோ வஞ்சுகமே. (10)

அத்திபா திப்பிரிய வாதிவெளி யாயிருந்தாற்
சுத்தமிலாச் சிவபரத் தொய்தமெங்கே யஞ்சுகமே. ()

---

## சந்த விருத்தம்.

நன்னனு - நன்னனு - நான நன்னன
நானன - நானன - நானனே

சொல்லலாஞ் சொல்லலாந் தார தனங்களைத்
தூற்றிவிட் டோமென வாயாலே. (1)

நன்னனு - நன்னனு - நன்ன - நனநன்ன
நானன - நானன - நானனே

சொல்லலாஞ் சொல்லலா மந்தக் கரணத்தைச்
சுட்டுவிட் டோமென வாயாலே. (2)

---

செய்யுள்வடிவச்
சுவாநுபவத் திருவாக்கு முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

சர்வஞ்சின்மயம்.

## கிளிப்பத்து.

வெண்செந்துறை.

* கண்படையுஞ் சாக்கிரமுங் காணுத் துரியநிலைப்
பண்படைவ தென்ருே பகராய்நீ யஞ்சுகமே. (1)

உள்ளும் புறம்புமன முற்றிடுஞ்சங் கற்பசகந்
தள்ளிச் சுகநிலையிற் சார்வதென்ருே வஞ்சுகமே. (2)

உன்ன லொழிதலினு லுண்டரந்தை யின்பாரிது
பன்னு சமநிலையிற் பாறலென்ருே வஞ்சுகமே. (3)

உள்ள நினைப்புமறப் புற்றிடினுேர் தன்வடிவை
யுள்ள படியுணர வொண்ணுமதோ வஞ்சுகமே. (4)

இத்தரையிற் றேகமெடுத் தெய்துமனச் செய்கைவிட்டுச்
சித்தசம மாம்வாழ்வு சேர்வதென்ருே வஞ்சுகமே. (5)

---

* கண்படை—துயில் (சுழுத்தி) கேவலம். சாக்கிரம்—சகலம் (இதில் சொப்டனம் அந்தர்ப்பாவம்.) இச்செய்யுளில் மகான் சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதி முறையில் :—

பகலுட னிரவு மிடையினு முனது
பாதப்பே ரொளியிடைப் புகுந்து
சகலகே வலத்தின் ருக்கற வடியேன்
றகுசுகத் திருக்கு நாளுளதோ..........என்றும்

குமாரதேவர் பதிகத்தில் :—

இரவுநன் பகலு மிலாதமத் தியத்தில்
இருந்திடுந் துருவனைப் போல
இரண்டுதட் டகத்தும் நிறைபொருட் சமனுய்
இருந்தநற் றராசுமுட் போலப்
புரையுறு சகல கேவல மதனிற்
பொருந்திடா தினியசுத் தத்திற்
பொருந்தியே யகந்தை தவிர்ந்துநான் வாழப்
பொருந்தவைத் தாண்டருள் புரிவாய்......என்றும்

திருவாய்மலர்ந்தருளியுள்ள அருமைச் செய்யுட்களின் கருத்து வந்திருத்தல் காண்க.

இட்டமொடு நாமவுரு வெய்திமனஞ் சுட்டியுறுஞ்
சுட்டறிவு நீங்குநிலை தோய்வதென்றோ வஞ்சுகமே. ()

தம்மா லறிவறியா மையிரண்டுந் தள்ளிவிட்டுச்
சும்மா விருக்குநிலை தோய்வதென்றோ வஞ்சுகமே. (7)

இத்தேகம் பற்றி யிருக்குமொரு தேகியின்றி
யெத்தேக மும்யானு யிருப்பதென்றோ வஞ்சுகமே (8)

மூலப் பகுதி முடிந்துமுடி யாதுபெறுஞ்
சீலப் பரமசுகஞ் சேர்வதென்றோ வஞ்சுகமே. (9)

சித்த மிறந்தாற் சிவமிறக்குந் தேகியுள
தத்தன்மையின்றியவ னுவதென்றோ வஞ்சுகமே. (10)

அத்திபா திப்பிரிய வாதிவெளி யாயிருந்தாற்
சுத்தமிலாச் சீவபரத் தொய்தமெங்கே யஞ்சுகமே. ()

---

## சந்த விருத்தம்.

நன்னனு - நன்னனு - நான நன்னன
நானன - நானன - நானுனே

சொல்லலாஞ் சொல்லலாந் தார தனங்களைத்
தூற்றிவிட் டோமென வாயாலே. (1)

நன்னனு - நன்னனு - நன்ன - நனநன்ன
நானன - நானன - நானுனே

சொல்லலாஞ் சொல்லலா மந்தக் கரணத்தைச்
சுட்டுவிட் டோமென வாயாலே. (2)

---

செய்யுள்வடிவச்
சுவாநுபவத் திருவாக்கு முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்
சர்வஞ்சின்மயம்.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்

# சுவாநுபவத் திருவாக்கியங்கள்

சர்வம் பஞ்சபூத மயம். 1

சர்வம் மித்தை. 2

சர்வஞ் சின்மயம். 3

நாமரூப நாடாமல் பகிர்முகமின்றியிருக்கவேண்டும் 4

பரிபூரணமாகிய தனக்கு என்ன வேண்டுவது? 5

எல்லாந் தோற்றமாத்திரம். 6

அதிட்டானமாகிய தானைப் பார்க்கும்போது நான் அவன் எங்கே? 7

உபசாந்தமுந் துரியம்; அறியாத விடயமுந் துரியம். 8

பாசபந்தம் வரும்போது பாசநிவிர்த்தியுந் தோன்ற வேண்டும். 9

சுகதுக்க முள்ளவரையில் தாரதம்மிய நீங்காது. 10

பிரபஞ்சமித்தையா பாவனையினாலுந் தன்மய பாவனையினாலுங் காண்பான் காட்சி நீங்கும். 11

எல்லாவற்றையுந் தான் அறிவதாயுந் தன்னை யொன்றும் அறியாததாயு மிப்படிக் காண்கிறதே பிரத்தியட்ச ஞானம். 12

தன்னிடத்தி லகங்காரம் பிராந்திமூலப் பிரமை. 13

இங்கும் அங்கும் ராகத்துவேஷமின்றி யிருந்தால் இரண்டுக்கு மைக்கியம். 14

பிரத்தியட்சமான விடயமும் அப்பிரத்தியட்சமான விடயமுந் திருக்குவாகிய ஞானத்துக்குத் திரிசியம்.

வஸ்துநிர்ணயத்தில் பிரபஞ்சந் தானல்லவென்றும், அத்துவிதத்தில் தன்னைத்தவிர வேறில்லாதபடியினாலே தானென்றும் காண்க. 16

சோகமடைகிறதனாலே துக்கம் மோகத்தினாலே சுகம்.

இத்தனையும் மாயாமய மலவோ, உள்ளபடி முடியும். 18

திரிசியந் திருக்குவையன்றித் தோன்றாது. 19

அதிட்டானத்தைத் தவிர வாரோபத்துக்கு வடிவமில்லாதபடியினாலே யெல்லாம் அதிட்டானமயந்தான். (20)

இந்திரசாலக்கார னிடத்தில் கந்தருவபுரந் தோன்றி நில்லாம லழிந்துபோவது போலத், தன்னிடத்திலுண்டாகாநின்ற சங்கற்ப மெவ்வளவோ அநேகமா வந்தும் ஒன்றும் நிற்கவில்லை. 21

உபசாந்தமானாலுந் தன்மயமானாலுஞ் சகலத்தியாகந்தான். 22

நிவிர்த்தியா யிருக்கவேண்டும்; அல்லது, நாமரூப நாட்டம் வந்தால் அத்துவிதமா யிருக்கவேண்டும்.

தன்னைச் சிவ பாவனையாகக் காண்கிறதே பிறவி, தன்னைச் சிவரூபமாய்க் காண்கிறதே மோட்சம்.

சகல கலைஞான வல்லவர்களுக்கும் நிராசை வேண்டுவதுதான். 25

எல்லாஞ் சிவன்செயல்தான். 26

எல்லாஞ் சிவாகாரந்தான். 27

சிற்றறிவிலேதான் உயர்வு தாழ்வான தாரதம்மியங்கள். 28

பேரறிவிலே சமசாட்சிதான். 29

உபசாந்தத்தில் சச்சிதானந்த மூன்று மநுபவமாய்க் காணவேண்டும். 30

பிரபஞ்சத்தில் சொல்லப்பட்ட பேதங்களெல்லாஞ் சிற்றறிவிலேதான் என்றறியவேண்டும். 31

எல்லா முன்னுடைய செயலேயானுல் கொடுத்ததார்? வாங்கினதார்? 32

சுதனைத்துஞ் சொரூபமே, யாவிங்குளதையிச்சிப்பேன் எதை யிகழ்வேனெனல் பற்றின்மை; இதில் யாருக்கும் நம்பிக்கை வரவேண்டுவதுதான். 33

தோகோக புத்தியினுலே யருந்தல்; இதனுலே பொருந்தல்; இதனுலே சகல ஆசையும் வந்தது. 34

நிருவிகற்பசமாதியில் என்ன தோற்றம் வந்தாலுந் தன்னைத் திருக்காகவே காணவேண்டுவதுதான்.

பிரபஞ்சத்தில் பஞ்சவிடய சுகத்தில் பொருந்தும் போது பிரியமாயிருக்கும். பிற்பாடு தனக்குத் தானே வெறுப்புக்காணும். இதுபோலவே தன் சொரூப சுகத்தில் பொருந்தும்போதும் பிரியம் வரும்; எத்தனைநா ளிருந்தாலும் பிரியம் வாங்காது. 36

சமுத்திரத்தில் முன்வந்த அலைபோய்ப், பின்னலை வருகிறதற்கு முன்னுலே, சமுத்திரமாத்திர மிருந்தது போலத், தன்னிடத்திலு முன்னுலே வந்த கடபட நினைவுபோய்ப், பின்னுலே வருகிற நினைவுக்கு முன் தானிருந்தது. இதனுலே பிரபஞ்ச மசத்து; தான் சத்து; தன்னை யநுபவிக்கிறதும் இந்த நிலைதான். 37

பூமியிலுண்டான வஸ்துக்களைக் கற்பிதமென்றுந் தன்மயமென்றுஞ் சொல்லலாம்; இதுபோல சிதாகாசத்துக்கு மேலில்லாதபடியினாலே அதிலுண்டானவைகளைக் கற்பிதமென்றுந் தன்மயமென்றுஞ் சொல்லலாம். 38

வகையாகக்கண்டு மயங்காமல், தொகையாகக் கண்டு சும்மாவிருக்கவேண்டும். 39

சாதுசங்கமே சகல சன்மார்க்கத்துக்கும் ஏது. 40

உபசாந்தத்திற் காண்பான் காட்சி யில்லை. 41

* மேல்நனவுபோல இராநின்ற துரியநிலையில் சர்வ துக்கநிவிர்த்தி. 42

உற்றவாறெதுவரும் அதுவருக. 43

எல்லாங் கதைதான். 44

எல்லாம் புலப்பந்தான். 45

பிறர்குற்றத்தைத் தானாக வெண்ணிக்கொண்டு தன் குற்றத்தை விசாரிக்கவேண்டும். 46

சிற்றறிவாகிய சீவவறிவே யெல்லாவற்றிற்கு மூலம்.

மனது முதலாகிய பிரபஞ்ச வியல்புகளு மேகாடம்பரந்தான். 48

ஞானநாட்டத்திலே சிரத்தையும், பிரபஞ்சநாட்டத்திலே யசிரத்தையும் வேண்டும். 49

தத்துவாதத்துவ விசாரம் பண்ணி, அதத்துவத்தைத் தள்ளித், தத்துவத்தைத் தானாகக் கண்டு, சந்தேக விபரீதமற விருக்கவேண்டும். 50

செனன மரணமும் நினைவுமாத்திரம். 51

---

* மேல் என்றது முன்னே.

நாமரூபமாய் நாடுகிறதைத் தள்ளிச், சொரூபமாக நாடுகிறதே சமநிலே. 52

குருவாக்கியத்தில் சந்தேக விபரீதமின்றி யிருக்கிறது மெய்ப்புருடார்த்தம். 53

தன் சுபாவநிலேயில் நினைவுக்கு நித்தியத்துவம் இல்லாததனுலே, பிரபஞ்சம் மித்தைதான். 54

அதிட்டான ஞானநிலேமை யுள்ளவர்களுக்கு, எல்லா மாகிய அத்துவித ஞானமும் வரும். 55

பற்றின்மையாகிய துரியநிலேமை யுள்ளவர்களுக்குப் போன காரியத்திலும், வருகிற காரியத்திலும் நினைவு தோன்ரும லிருந்தால், சாட்சாத்காரந் தான். 56

தான் சித்துரூபனென்கின்ற புத்தி வாங்காமலிருந் தால், நான் நீ யென்கின்ற பேதமாகிய அஞ் ஞான நீக்கம் வரும். 57

நிகழ்காலமாகிய எதிர்காலத்தில் செய்காரியங்களில், பின் வருத்தமுஞ் சௌக்கியமு மறிந்து செய்ய வேண்டும். 58

அக்கினியில் எவ்வளவு பொறி கிளம்பினுலும் அக்கி னிக்கு லயமில்லாதது போலப், பூரணமான தன்னிடத்தில் தேகாதி முதலாய வாழ்ந்ததாயுந் தாழ்ந்ததாயும் என்ன நினைவு வந்தாலுங் கற்பிதம்; தான் நித்தியம். 59

எல்லாமானதாகத் தன்னை யறிந்தால், ஈதலு மிரக்க மும் வரும்; இராகத்துவேஷம் வாராது. 60

தன்னிடத்தில் பெருமை சிறுமை, பகை உறவு, சுக
துக்கமாய் வருகிற சங்கற்பம் கற்பிதம்; ஆரோ
பம் அத்தியாசந்தான். 61

சரீரமுதலான பிரபஞ்சங் காலத்தில் உட்பட்டபடியி
னுலே அதினிடமாய் வாராநின்ற உயர்வு தாழ்வு
வருத்தங்களுக்குப் பிரமாணமில்லை. 62

பிரபஞ்சத்தில், விவேகத்தினுலே குணத்தைப் பொரு
ளாய்க் கொள்ளாமல், குற்றமே காணவேண்டும்.

ஒன்றிலே தோன்றி யனைத்துருவமான வுணர்வுக்குப்
பகையுறவென் றுரைப்ப தெங்கே? 64

நான் சித்துரூபன் என்கின்ற புத்தி மறந்தால், உடனே
விட்சேபமும் விபரீதமும் வரும். 65

சுவரிடத்தி லுண்டான சித்திரம் வத்துவாகாது; இது
போலத் தன்னிடத்தி லுண்டான சர்ப்பமுதலா
னவை வத்துவாகாது. 66

தன்னைப் பஞ்சகிர்த்திய முடையவனுகக் கண்டால்,
செனனமரணந் தனக்கில்லை. 67

துரியநிலையிலும், எல்லாஞ்சின்மயமென்ற நிலையிலும்
புத்தியழுத்தம் வேண்டும். 68

கூத்தாடியைப்போலக், கூத்து நிலையல்ல; அதுபோல,
எல்லாங் கூத்தாகக் கண்டால், தான் நித்தி
யந்தான். 69

பிரமாமுதற் றம்பப்பூச்சி பரியந்தம் நிலைமையில்லாத
படியினுலே, தாஞெருவன்மாத்திர மிருக்கிறவன்;
இதனுலும் அத்துவிதந்தான். 70

செகத்தெல்லாந் தன்னைத்தவிர இல்லாதபடியினலே யும், தானே யெல்லாமானதாலும் அத்துவிதந் தான். 71

சரீரமெடுத்து விசாரந் தோன்றினவரைக் குள்ளாக வெகுவிதங்களாய் உத்கிருஷ்டமென்று சொல்லப் பட்டபேர்க ளிருக்கவில்லை; ஆனதால் தேகாதி முதலானவைகளில் என்ன திரமில்லை? 72

பிரபஞ்சங் காலத்திரயத்தினு மில்லாதபடியினலே யும், ஒருநினைவு வரும்போது ஒருநினைவு அழிந்து போகிறபடியினலேயுங், காணப்பட்டன வெல்லா மழிந்து போகிறபடியினலேயும், மித்தையென்று சொல்லுகிறதிலே சந்தேகமில்லை. 73

* திருநதித்துறைகளெல்லாந் தீம்புனல் வறந்தவேயோ

அக்கினியி லுண்டாகாநின்ற பொறிக்கு, அனல் காரண மானதுபோலச், சகத்துக்கு ஆத்மாவே காரண மல்லாமல், இடையிலொன்றுஞ் சொல்லத்தக்க தில்லை. 75

---

* இவ்வாக்கியம், ஆரியப்பப்புலவர் பாகவதம் இரண்டாங் கந்தத்தின், மாயவனிலையுரைத்த அத்தியாயத்துப் பத்தொன்பதாங் கவியின் முதலடியாகும்.

ஸ்ரீ ஆண்டவரவர்கள், தம்மை யண்டிய மாணவர்களுக் குத் தீவிர வைராக்கியத்தை உண்டாக்குதற்பொருட்டு, அடிக்கடி இதைத் திருவாய்மலர்ந்தருளி வந்திருப்பார்கள் போலும் அவ்வருமைச் செய்யுள் வருமாறு :—

திருநதித் துறைக ளெல்லாந் தீம்புனல் வறந்த வேயோ
விரிகட லமுத மூறும் விழுச்சுவைக் கனிய வாய
மரனெலா மாண்ட வேயோ மாநிதிச் செருக்கி னர்கண்
குருடுபட்டவர்போலென்னேகுறையிரந்துழல்கின்றரால்

என்பதேயாம்.

பழுதையிலுண்டான பாம்பு பழுதையே யென்று சொல்லலாம்; அதுபோலப், பிரம்மத்திலுண்டான சகத்துப் பிரமந்தான். 76

தன்னைக் கர்மகர்த்தாவாய்க் காணும்போது கர்த்துரு தந்திர மென்றும், நித்தியமாய்ப் பூரணமாய்க் காணும்போது வஸ்துதந்திரம் என்றும் அறிக.

காரண காரியமா யுள்ளதுக்குப் பரிச்சின்னத்துவ முண்டு; நிஷ்காரணமா யிருக்கின்ற ஆத்மாவுக்கு அபரிச்சின்னத்துவ பூரணமும் உள்ளதுதான். 78

சகல சாத்திர விசாரம் பண்ணின விசார ஞானிகளுக்கு யான் எனது எனப் போகத்தி லாசாபாசப் பிர விர்த்தி வருகிறதற்குக் காரணம், பிரபஞ்சம் சத்தியமென்னும் பிரமாணபுத்தியேயாம். 79

அகேமான செல்வ முடையவர்களுக்கு உதாரபுத்தியும் இரக்கமுமில்லாமல் இருத்தல், அவிவேகத்தி னாலேதான். 80

தெய்வ வியதிரிக்தமாகச் சீவேசுர சகத்துக்களில் கட்டுப்பாடாய்ப் பேசாநின்ற வசனங்களெல்லாம் புத்திமான்களுக்கு நச்சு வசனங்களாய்த்தோன்ற வேண்டும். 81

வசனவடிவச்

சுவாநுபவத் திருவாக்கியங்கள்

முற்றுப்பெற்றன.

---

சம்பூரணம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சொரூபாநுசந்தான நாமங்கள்.

நான் அகண்டன்
நான் அகர்த்தா
நான் அகாமன்
நான் அகாரணன்
நான் அகேயன்
நான் அக்ரோதன்
நான் அசங்கன்
நான் அசம்சாரி
நான் அசரீரன்
நான் அசலன்
நான் அச்சுதன்
நான் அட்சரன்
நான் அணு
நான் அத்தொய்தன்
நான் அநந்தன்
நான் அநாதி
நான் அநாதிமுக்தன்
நான் அநாவிருதன்
நான் அநுபாதேயன்
நான் அநூதனன்
நான் அநேகரூபன்
நான் அபயன்
நான் அபரிச்சின்னன்
நான் அபரோட்சன்
நான் அபேதன்
நான் அபோக்தா
நான் அப்பிரமேயன்
நான் அப்பிரவிர்த்தன்
நான் அப்பிராணன்
நான் அமனசு
நான் அமிர்தன்
நான் அலோபன்
நான் அவ்வியாகிருதன்
நான் ஆதி
நான் ஆத்மா
நான் ஆனந்தரூபன்
நான் உன்னதன்
நான் ஏகரூபன்
நான் காரணன்
நான் கூடஸ்தன்
நான் சத்தியன்
நான் சத்ரூபன்
நான் சம்பு
நான் சர்வகாரணன்
நான் சர்வகெதன்
நான் சர்வசமன்
நான் சர்வஞ்ஞன்
நான் சர்வதோமுகன்
நான் சர்வாகாரன்
நான் சர்வாதாரன்
நான் சர்வாதிஷ்டானன்
நான் சர்வாத்மன்
நான் சர்வாபாவன்
நான் சாட்சி
நான் சாந்தன்
நான் சின்மாத்ரன்
நான் சிவன்
நான் சுத்தன்
நான் சுவப்பிரகாசன்
நான் சுயம்பிரகாசன்

நான் சுயன்
நான் சூன்யன்
நான் க்ஷேத்திரக்ஞன்
நான் ஞானசொரூபன்
நான் ஸ்தாணு
நான் திருக்கு
நான் நாஞரூபன்
நான் நிஷ்கிரியன்
நான் நிஷ்பிரகிருதி
நான் நிஷ்பிரபஞ்சன்
நான் நித்தியமுத்தன்
நான் நித்தியானந்தன்
நான் நித்தியன்
நான் நிரஞ்சனன்
நான் நிரவயவன்
நான் நிராகாரன்
நான் நிராதாரன்
நான் நிரிந்திரியன்
நான் நிரீச்சுரன்
நான் நிருபத்ரவன்
நான் நிரூபன்
நான் நிர்க்குணன்
நான் நிர்ச்சம்பந்தன்
நான் நிர்ச்சீவன்
நான் நிர்த்தோடன்
நான் நிர்ப்பெத்தன்
நான் நிர்மலன்
நான் நிர்லேபன்
நான் நிர்விகற்பன்
நான் நிர்விகாரி
நான் நிர்விசேஷன்
நான் நிர்விஷயன்
நான் நிர்விரதன்
நான் பரமானந்தன்
நான் பரமார்த்தன்
நான் பரிபூரணன்
நான் பிரத்தியக்கு
நான் பிரத்தியட்சன்
நான் பிர்மம்
நான் புத்தன்
நான் புராதனன்
நான் மகத்து
நான் மகாசூன்யன்
நான் மனோவாசாமகோசரன்
நான் முக்தன்
நான் யதார்த்தவஸ்து
நான் வஸ்து
நான் விபு

———

நான் பூரணன்
நான் ஏகன்
நான் பரப்பிரமம்
நான் நிதானன்
நான் கேவலன்
நான் துரியன்
நான் சமன்
நான் போதன்
நான் இலக்கியன்
நான் சஞதனன்
நான் சீவன்
நான் தத்துவம்
நான் விண்
நான் சோதி
நான் ஆன்மா
நான் சூக்குமன்
நான் விமலன்
நான் அஜடன்
நான் அஞமயன்
நான் அதூலன்
நான் நிரந்தரன்

நான் அகோசரன்
நான் அஜன்
நான் அவிநாசி
நான் நிஷ்களன்

---

நான் பரமகதி
நான் பரகாஷ்டை
நான் பரதத்துவம்
நான் பராபரம்
நான் பரமான்மா
நான் புருடன்
நான் பூன்றன்
நான் பரமசிவன்
நான் மகாதேவன்
நான் பரமேசன்
நான் பசுபதி
நான் புராணன்
நான் ஈசன்
நான் பரமன்
நான் அரி
நான் உருத்திரன்
நான் மகேசன்
நான் சதாசிவன்
நான் பரமாகாசன்
நான் மகாதாரன்
நான் மகாவியாதன்
நான் அத்தா
நான் பதி
நான் விசுவாதிகன்
நான் அங்கி
நான் பூதபாலன்
நான் ஈசுவரன்
நான் ஈசானன்
நான் பர்த்தா
நான் அர்த்தா
நான் மகாரிஷி
நான் தேவன்
நான் ஈன்ருேன்
நான் விண்டு
நான் நாசமிலான்
நான் பிரபு
நான் பிராணன்
நான் பூமா
நான் புமான்
நான் அரன்
நான் அந்தரியாமி
நான் சாசுவதன்
நான் சங்கமிலான்
நான் தொந்தமிலான்
நான் சனுதனன்
நான் அட்சரம்
நான் தகராகாசன்
நான் அது
நான் பிரத்தியகான்மா

---

நான் அஜராமரணன்
நான் அசங்கோதாசினன்
நான் அவியயன்
நான் அவியத்தன்
நான் அபெத்தன்
நான் அகாமாயன்
நான் நிவிர்த்தன்
நான் சிற்கனன்
நான் சிற்சதாநந்தன்
நான் சிற்றம்பரன்
நான் சங்கற்பாதிதன்
நான் பாசாதிதன்
நான் பரம்பொருள்

ஆக நாமங்கள் 195.

# பிழை திருத்தம்.

| பக்கம் | | வரி. | பிழை | | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| 8 | — | 15. | பினி | — | பிணி |
| 14 | — | 28. | மருளல்ல | — | மிருளல்ல |
| 20 | — | 14. | முழலா | — | உழலா |
| 25 | — | 25. | கங்கையைது | — | கங்கையது |
| 55 | — | 22 | செய்யு முபதேசந் | - | செய்யுமுப தேசந் |